# பட்ட மரம்




## தில்லை-வில்லாளன்

எழில் நிலையம்

பெண்ணாடம் ★ தெ. ஆ. மாவட்டம்

# முன்னுரை

"பட்டமரம்" என் மனதில் என் கல்லூரி வாழ்நாளிலேயே துளிர்விட்ட கற்பனையாகும். ஆனால் இதனை எழுதும் வாய்ப்பு ஏற்படாமலே இருந்தது. கடைசியில் சென்னையில் ஒருநாள் எழில் நிலையத்தின் உரிமையாளர் என்னை பார்த்தார். என் நாவல் ஒன்று வெளியிட விரும்புவதாக அறிவித்தார். நான் எழுதித் தருவதாக வாக்களித்தேன். ஆனால் அப்பொழுதும் எழுதவில்லை. 'பட்ட மரம்' துளிர்ப்பதென்பது அவ்வளவு எளிதில் முடியக்கூடிய காரியமா?

சிதம்பரம் வந்தபிறகும், தோழர் 'பட்ட மரத்திற்கு' கடிதத்தாலேயே, நீர் வார்த்தபடியிருந்தார். கடைசியில், ஏறத்தாழ ஒன்றரையாண்டுகளுக்குப் பிறகு 'பட்ட மரம்' துளிர்த்திருக்கிறது.

'பட்ட மரம்' என்ற தலைப்பில், பல 'துளிரான' கருத்துக்களைக்கூற முற்பட்டிருக்கிறேன். அக்கருத்துக்களைக்கூற, கற்பனை

உடை உடுத்தியிருக்கிறேன். கருத்தில்லாத கற்பனை என்ருல் செய்யமுடியாது. என் ஆசிரியர் எனக்குக் காட்டிக்கொடுத்த வழியும் அதுவல்ல!

ஆகவே, கற்பனையைவிட கருத்து சிறந்ததா, கருத்தைவிட கற்பனை சிறந்ததா என்ற போட்டிப் பந்தயம் என் நாவலில் நடைபெறவேண்டும் என்பது என் அவா. அந்த அவா இதில் வெற்றிப்பெறுகிறதா இல்லையா என்பதை நான் கூறமாட்டேன். படிக்கும் நண்பர்கள்தான் அதற்குரிய நீதிபதிகள்!

தோழர்களே, 'பட்ட மரம்' கண்டு, பதில் தாருங்கள். இதனை உங்கள் முன்ருல் படைக்கும் எழில் நிலையத்தாருக்கு என் நன்றி-வணக்கம்.

சிதம்பரம்,
25—8—1955

தில்லை - வில்லாளன்.

# பதிப்புரை

அரசியல், சமுதாயம், பொருளாதாரம் போன்ற துறைகளில் உரிமையிழந்து அடிமைப்பட்டுக் கிடக்கும் திராவிடத்தை, எழுத்தாளர்கள் தம் எழுத்துத் திறமையாலும், பேச்சாளர்கள், தமது வீரம் செறிந்த மேடைப்பேச்சுக்கள் மூலமும், முன்னணித் தலைவர்கள் சிறைக்கோட்டம் சென்றும், தடியடிப் பட்டும், துப்பாக்கிக் குண்டைத் தாங்கிக் கொண்டும், திராவிடத்தை மீட்கும் பணியிலே ஈடுபட்டுள்ள காலம் இது. அந்தத் துறையிலே, தனது பங்கையும் ஏற்று செய்யும் பொருட்டு எழில் நிலையம் சீர்திருத்த எழுத்தாளர்களின் கருத்துக்களை நூல் வடிவாக்கி வழங்க முன் வந்துள்ளது. அம் முயற்சியின் முதற்படிதான் பட்டமரம்.

தமிழகத்திற்கு அறிமுகம் தேவையற்ற திரு. தில்லை-வில்லாளன் அவர்கள், திராவிடத்தின் அடிமைத் தளை நீக்கத் தோன்றியுள்ள முன்னணி

அமைப்பின் தலைவர்களுள் ஒருவர். தனது எழுத்துப் பணியை அரசியல் துறையோடு நிறுத்திவிடாமல் பல சிறுகதை, நெடுங்கதைகளையும் எழுதியுள்ளார்கள். கதைகளில் வரும் சம்பவங்களும், பாத்திரங்களின் உரையாடல்களும் வெறும் பொழுதுபோக்கு சாதனமாக மட்டுமிராமல் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறந்த இலட்சியத்தை வற்புறுத்துவதாக இருக்கும். அந்த வகையில் அமைந்த ஒரு சிறந்த இலட்சியக் கருவூலம்தான் பட்டமரம். இதனை வெளியிடுவதன் மூலம், கடமை மறந்த ஒரு சிலரையேனும் திருத்த முடியும் என்ற நம்பிக்கையில், தமிழகத்தின்முன் பெருமையுடன் படைக்கிறோம்.

வணக்கம்.

—எழில் நிலையத்தார்.

# காணிக்கை

என் வாழ்க்கைப் பாதையில் என்னுடன் கை சேர்த்து உலவி வரும் என் ஆருயிர் நண்பர்கள் பலர் உண்டு. அவர்களில் ஆண்களும் உண்டு, பெண்களும் இருக்கிறார்கள். அவர்கள் அத்தனைப் பேருக்கும் இது என் அன்புக் காணிக்கை.

# பட்ட மரம்

## நான்

தோட்டத்திலிருந்த நாரத்தை மரத்திற்கு தினமும் தானே, நீரை ஊற்றுவாள் நிலா.

அவள். மற்ற எல்லா வேலைகளையும் வேலைக்காரியைச் செய்யச் சொல்வாள். ஆனால், நாரத்தை மரத்திற்கு மட்டும் தானே நீர் ஊற்றுவாள்.

அவள் காலை, மாலை, தவருது நாரத்தையைக் கவனிப்பாள்.

நிலாவுக்கு, நாரத்தை மரத்தின்மீது ஏன் அவ்வளவு அக்கரையென்று கேட்கிறீர்களா? அது தரும் பழத்தை விரும்புபவள் என்று தவறுதலாகக் கருதிவிடாதீர்கள். அவளுக்கு நாரத்தை ஊறுகாய் என்ருல்கூட தலைநடுக்கம்—ஆனுலும் நாரத்தை மரத்திற்கு நீர் ஊற்ற மறப்பதில்லை.

நான் மட்டும் நிலாவைக்கேலி செய்வேன்.

'நிலா, மனிதனைக் கொஞ்சம் கவனி—இவனுக்கு காலை, மாலை காபி நீரை ஊற்றிக் காப்பாற்று' என்பேன். அவள் முகம் நாணத்தால் சிவக்கும். ஆனுலும், நாரத்தை மரத்தை மறப்பதில்லை.

* * *

## பட்ட மரம்

பக்கத்து வீட்டில் புதிதாகக் குடி வந்திருந்தார்கள். ஏனெனில் என்றும் இருண்டு கிடக்கும், அந்த வீட்டில் அன்று ஒளி தெரிந்தது.

நான் மாலை அலுவலகத்திலிருந்து திரும்பி வந்தவுடன், அந்த ஒளி வியப்பைத் தந்தது. ஏனெனில் அந்த வீட்டில், குடி வருபவர் யாரும் நிலைத்திருப்பதில்லை. மேலும் அந்த வீட்டைப்பற்றி ஊரிலே பலமாதிரி கூறுகிறார்கள். அந்த வீட்டில் யாரோ ஒருவன் தூக்கு மாட்டிக்கொண்டு இறந்துவிட்டானும். அவன் பேயாய் வந்து அலைகிறானும். இந்த வதந்தி கேட்டவுடன், புதிதாக வருபவர், காலி செய்துகொண்டு போய்விடுவர்.

உள்ளே சென்று என் உடைகளைக்கூடக் களையவில்லை.

நிலவு மிகவும் வருத்தத்தோடு கூறினாள்.

'அத்தான், ஒரு பெரிய துக்ககரமான சேதி' என்றாள்.

'என்ன?' என்றேன், ஆவலோடு.

'இந்த நாரத்தை......' என்றாள். அவள் பேச்சை முடிப்பதற்குள், நான் பேசினேன்.

'நீ, மரமந்திரி முன்ஷியின் மகளாகப் பிறந்திருக்க வேண்டும்!' என்றேன்.

'கேலி பேசவேண்டாம். அதை வந்து பாருங்களேன்' என்றாள்.

நான் அலட்சியமாக என் வேலைகளைக் கவனித்தேன். நிலா. என்னை கையைப் பிடித்து இழுத்துக்கொண்டே போனாள், தோட்டத்திற்கு.

உண்மையில் நாரத்தை மரம், வாடியிருந்தது. அதிலிருந்த தழைகள் பசுமையிழந்து காட்சியளித்தன.

'நிலா, உன்னுல்தான் நாரத்தைக்கு இந்த ஆபத்து. அதிக நீரை ஊற்றி அதன் வேரை அழுக வைத்துவிட்டாய்' என்றேன்.

'கிடையாது - நீரில் ஏதோ கலந்திருக்கவேண்டும்' என்ருள் அவள்.

'சரி. நாளைக்கு புது எருவிட்டு, நீர் ஊற்றிப்பார்க்கலாம்' என்றேன்.

உள்ளே வந்து வாசலில் சாய்வுநாற்காலியில் படுத்தபடி வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

நாரத்தை மரம் என் மனதிலே விவரிக்க முடியாத நினைவுகளை எழுப்பிக்கொண்டிருந்தது.

நிலா காட்டிய அதிக ஆர்வமே அதனை இந்நிலைக்குக் கொண்டுவந்து விட்டது. சில வீடுகளில் பெற்ரேர் காட்டும் அளவிற்கு மீறிய அன்பு, பிள்ளைகளை சண்டிகளாக்குவதைக் காண்கிருேம்.

பச்சைப்பசேரென்று இருந்த நாரத்தை வாடிவிட்டது. இனி அதன் வாட்டம் மாற்றப்படவில்லையென்ருல் அவ்வளவுதான். கவனிப்பார் யார்? அது போலத்தான் மக்களின் நிலையும். சீரும் சிறப்புமாய் இருந்தால், பலர் வருகின்றனர். சீரும், சிறப்புமிழந்துவிட்டால் அவ்வளவு தான் - திரும்பிக்கூடப்பார்க்கமாட்டார்கள்.

இப்படி எண்ண மண்டலத்தில் உலவிக்கொண்டிருக்கையில் பக்கத்துவீட்டு நினைவு வந்தது.

'நிலா, பக்கத்து வீட்டிற்கு யார் குடி வந்திருப்பது?' என்றேன்.

'ஒரு பெண்' என்ருள், நிலா.

எனக்கு அவளின் கேலி எரிச்சலை உண்டாக்கிற்று.

'அவளுக்கு இரண்டு கண் இருந்திருக்குமே!' என்றேன்.

'அந்தக் கண்களும், கலங்கியிருக்கின்றன' என்ருள்.

'நிலா, கொஞ்சம் விபரமாகச் சொல்' என்றேன்.

'பக்கத்து வீட்டைப் பற்றி உங்களுக்கு என்ன அக்கரை? ஏதாவது என் வாயைப் 'பிடுங்கி' அதை வைத்துக்கொண்டு, அடுத்த வாரம், வெளுத்து வாங்கவா?' என்ருள்.

'வெளுக்க, எங்களுக்குத் தெரியாது—விபரமாக, இதைச் சொல்' என்றேன்.

'இன்று காலையில்தான் வந்தாங்க—அதற்குள் எப்படி விபரம் முழுவதும் தெரியும். ஒரு பெண்ணைத்தான் பார்த்தேன். அந்தப் பெண் பள்ளியில் ஆசிரியை போலிருக்கு!' என்ருள்.

'வேறு விபரம் தெரியாதா?' என்றேன்.

'பாவம் அந்தப் பெண்ணைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது—நீங்கள் உங்கள் கற்பனைக்கு, அந்தப் பெண்ணைப் பலியாக்கி விடாதீர்கள்' என்ருள்.

எனக்கு சிரிப்புதான் வந்தது. நிலா கூறியதில் தவறில்லை. கற்பனை மாளிகைக்கு, உண்மை அடிப்படை

யாக இருக்கவேண்டும். இதனைப் புரிந்து கொள்ளாத வர்கள்தான், இது என் முழுக்கற்பனையென்று 'தமுக்கு' அடிப்பார்கள். சிலர், எழுதுவதை, இதிலிருந்து திருடியது, அதிலிருந்து 'அபேஸ்' செய்தது, இன்னதிலிருந்து எடுத்து மாற்றிக் கொண்டது என்கிறார்கள். இதில் அர்த்தமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. எதையாவது ஒன்றின் நினைவின்மீதுதான் கற்பனையே எழமுடியும். கற்பனை செய்வது, அந்தரத்திலே தொங்கவிடும் இந்திரஜாலமல்ல—என்னைப்பொறுத்த மட்டில், என்னைச் சுற்றியுள்ளவர்களின் வாழ்க்கை சம்பவங்கள் ஒன்றின்மீது கற்பனை மாளிகை கட்டிவிடுவேன். இந்தப் பழக்கத்தை அறிந்ததால்தான் நிலா எச்சரித்தாள்.

* * *

இரவு நெடுநேரம் கண்விழித்து, ஏடுகள் பலவற்றைப் பிரித்துப் படித்துக்கொண்டிருந்தேன்.

அழகான புத்தகம் - நல்ல அட்டை - உயர்ந்த காகிதம் - அச்சிட்ட முறை அழகாக இருந்தது. ஆனால், பக்கத்துக்குப் பக்கம் பயங்கரமான எழுத்துப்பிழைகள். அவை, அந்நூலின் வாழ்வையே கெடுத்துவிட்டன. என்னால் தொடர்ந்து படிக்கமுடியவில்லை - கீழே வைத்துவிட்டேன்.

அழகான பெண் - அற்புதமான அலங்காரம் - அறிவோ ஓடும் அருவி - ஆனால், அவள் வாழ்வில், அச்சுப் பிழை போல, கணவன் தேர்ந்தெடுத்துவிட்டால் என்ன ஆவாள்?

நூலுக்கு எல்லாமிருந்தும், அச்சடிப்பதற்கு முன் சரியாக, பிழைபார்த்து அச்சிடுவது எவ்வளவு இன்றியமையாததோ, அதே போன்றதுதான், மணப்பதற்கு முன், மணாளனைத் தேர்ந்தெடுப்பதும் - அச்சடித்துவிட்டால், அச்சடித்ததுதான் — அதுபோல் மணந்தால்,

மணந்ததுதான். புத்தகத்திற்கு திருத்தி, திருப்பி மறு பதிப்பு போடலாம். ஆனால், மங்கையின் வாழ்விற்குப் போடும் மறுபதிப்பு, சரியாக இருக்குமா? —இந்த எண்ணத்தையொட்டி, பக்கத்து வீட்டு நினைவு வந்தது. அந்த நினைவை அணைத்துக்கொண்டே தூங்கிவிட்டேன்.

* * *

விடிந்தது, நிலா மீண்டும் நாரத்தையைப்பற்றியே ஆரம்பித்துவிட்டாள். அதன் இலைகள் வாடியிருப்பதற்குரிய காரணத்தையே அவள் கேட்டாள். எனக்கும் அதுபற்றியே யோசனை.

நாரத்தை மரத்தின் வாட்டத்திற்குரிய காரணம் தேடிய என் மனதில் மீண்டும், அடுத்த வீட்டு நினைவு வந்தது. பற்பசையையும், பிரஷையும் எடுத்துக்கொண்டு வெளியில் வந்தேன். நான் எதிர்பார்த்ததைப்போலவே, பக்கத்து வீட்டுக்கு குடிவந்திருந்த பெண்ணைச் சந்திக்க முடிந்தது. அவள் பால்வாங்கி எடுத்துக்கொண்டு போனாள்.

நிலா சொன்னது முற்றிலும் உண்மை. அவள் முகம், சோகத்தின் சாயலாகவே இருந்தது. எனக்கு அவளைப் பார்க்கிற பொழுது வேறு கவனமே வந்தது.

ஒரு பாழடைந்த அரண்மனை — தூர்ந்துபோன அகழ் — புழுதியடைந்துபோன பொன் சிலை — இப்படி வேறு நினைவுகள் வந்துவந்து போயின. தஞ்சை அரண்மனையைப் பார்க்கவேண்டும் என்று ஒரு முறை சென்றிருந்தேன். அங்குள்ள சபாமண்டபங்களையும், மற்றவைகளையும் காணும்பொழுது ஒரு காலத்தில் எவ்வளவு எழிலும், ஏற்றமும்கொண்டு திகழ்ந்த இந்த இடம் இப்பொழுது இப்படியிருக்கிறதே என்று எண்ணினேன். அந்த நினைவுதான், அந்தப் பெண்ணைப் பார்த்தவுடன் ஏற்பட்டது.

## பட்ட மரம்

அவள் ஒரு காலத்தில், களிப்புக்கடலிலே உருண்டோடும் அலையாக இருந்திருப்பாள். இப்பொழுதோ, துன்ப ஆற்றின் சுழலாக இருக்கிறாள். அந்தப் பெண்ணைப்பற்றி எனக்கு ஏன் இவ்வளவு ஆராய்ச்சி — எனக்கே புரியவில்லை!

பல் துலக்கி, குளித்து முடித்துவிட்டு, காலையுண வருந்திவிட்டு, அலுவலகம் நோக்கி விரைந்தேன். போகும் பொழுது, எனக்கு இரண்டு நினைவுகள் — நாரத்தை இலை வாடியிருப்பதற்குக் காரணம் — அடுத்த வீட்டு நங்கையின் முகத்தில் சோகம் குடிகொண்டிருப்பதற் குரிய காரணம் — இரண்டையும் கண்டுபிடிக்கவேண்டும் — இப்படி என் மனம் சொல்லிக்கொண்டிருந்தது.

* * *

அலுவலகத்தில் எனக்கு என்ன வேலை? எழுத்தாளர் வேலை - **'வாழ்க்கை'** என்ற பத்திரிகையின் துணையாசிரியர் பணி. அங்கு நான் வைத்ததுதான் சட்டம். ஏனெனில் ஆசிரியர் **அம்பலவாணர்** அலுவலகத்திற்கே வரமாட்டார். எல்லா பொறுப்புகளையும் நானே பார்க்கிறேன். ஆகவே, ஆசிரியருக்கு காட்டும் மரியாதையை விட, எனக்கே, அலுவலகத்தில் அதிக மரியாதை.

அன்று பத்திரிகைக்கு, ஒரு 'பாரம்' செய்வதற்குரிய 'மேட்டர்' கொடுத்தாகவேண்டும். எனக்கு எழுத்து ஓடவில்லை.

**'போர்மன்' ஏகாம்பரம்** எதிரில் வந்து நின்றான். எப்பொழுதும் வேடிக்கையாகப் பேசும் **'கம்பாசிட்டர்' கண்ணுசாமி** கூடவந்து நின்றுவிட்டான்.

'சார், மேட்டர்' என்றான் ஏகாம்பரம்.

'சார், இன்னைக்கு, கதையா, கட்டுரையா, கவிதையா' என்று கேட்டான் கண்ணுசாமி.

'ஒன்றுமில்லை' என்றேன்.

'அப்படியொரு தலைப்பா?' என்றான் கண்ணுசாமி.

'போடா, போக்கிரி, ஒன்றுமே எழுதவில்லை!' என்றேன்.

'அப்படியானால், இன்றைய கதை என்னவது?' என்றான் ஏகாம்பரம்.

'ஒரு மணி நேரம் எல்லோரையும் 'டிஸ்ட்ரிப்பியூட்' போடச் சொல்லு — அதற்குள் எதையாவது எழுதித் தருகிறேன்.' என்றேன்.

'ஆசிரியர்களுக்கென்ன—ஏதாவது குளம், குட்டை, மரம், மட்டை, எதைப்பற்றியாவது எழுதித் தள்ளிவிடுவார்கள்' என்றான் கண்ணுசாமி.

'போடா, கண்ணுசாமி, உன் வேலையைப்பாரு' என்று அனுப்பிவிட்டு, நான் எழுதுவதற்கு என்னைத் தயார்செய்துகொண்டேன்.

'சுந்தரம், சூடாக ஒரு கப் காபி வாங்கி வா' என்று அனுப்பினேன்.

காபி வருவதற்குள், என் சோம்பேறி மனம் ஆமை வேகத்தில் ஓட ஆரம்பித்தது. கண்ணுசாமி கூறிய வார்த்தைகளை என் செவியேற்றவுடன், அது சிந்தனைக்கு தூண்டுகோலாக மாறிவிட்டது.

எதைப்பற்றி எழுதுவது என்றவுடன், குளம், குட்டை, மரம், மட்டை என்றான், கண்ணுசாமி. ஆமாம், குளத்திற்கு அருகிலுள்ள, ஒரு மரத்தைப்பற்றி எழுதினால்தான் என்ன என்று என் மனம் கூறிற்று.

அதுவும், காலையில், நிலா கேட்டாளே, நாரத்தை மரம், ஏன் வாடியிருக்கிறது என்று, அதையே, கற்பனைக்கு அடிப்படையாக வைத்து, எழுதுவது என்று முடிவுக்கு வந்தேன். சுந்தரம் கொண்டுவந்த காபி சுறு சுறுப்பைத் தந்தது.

பேனா வேகமாக ஓடிற்று, அன்று ஏகாம்பரம் எதிர் பார்த்தற்கு முன்பாக 'மேட்டர்' கிடைத்துவிட்டது. அந்த இதழ் 'வாழ்க்கை'யும் குறிப்பிட்ட நேரத்தில் தயாராகிவிட்டது.

*  *  *

நிலாவின் தங்கை **கலா**, சுட்டிப்பெண். கதைப்புத்தகங்கள் தான், அவளுக்கு இனிப்புப் பண்டங்கள். கலாவுக்கு மூத்தவள் **மாலா**. அவள் கதைப்புத்தகங்களை தன் உயிராக நினைப்பவள். இரண்டு பேருக்கும் புத்தகப் போர் நடப்பதைப் பார்க்கவேண்டுமே — பாரதபோர், இராமாயணப் போர் எல்லாம், இங்கு பிச்சை வாங்க வேண்டும்!

வாரந்தோறும், 'வாழ்க்கை' இதழ்கள் இரண்டு வீட்டிற்குக் கொண்டுபோவேன். அன்றும் எடுத்துப் போனேன்.

கலா, பிடுங்கினாள்—மாலா, இழுத்தாள். 'வாழ்க்கை'யில் கீறல் விழுந்தது. வேலைப்பளுவைத் தாங்கமாட்டாமல், உள்ளே வந்த எனக்கு, இந்த போர், மகா ஆத்திரத்தைத் தந்தது. ஆகவே இரண்டு பேருக்கும், சுடச் சுட இரண்டு 'தோசைகள்' முதுகில் தந்தேன்.

அழுகையை அடக்கியபடியே, இரண்டு பூனைக்குட்டிகளும், அந்த உடைந்த பால்பானையைப் பார்த்துக் கொண்டே, இரண்டு மூலைகளில் உட்கார்ந்திருந்தன!

இந்த 'வாழ்க்கை'ப் போராட்டத்தின் நடுவில் நிலா வந்தாள். அவள் ஏதோ கேட்கவே, 'உனக்கும் 'தோசைகள்' கிடைக்கும்' என்று உறுமினேன். அவள் கிழிந்து கிடந்த 'வாழ்க்கை'யை எடுத்தாள்.

நான், என் 'விசுவரூபம்' அடங்கி, 'வாமனுவதாரம்' எடுத்து, சாய்வு நாற்காலியில் அமர்ந்தேன்.

நிலா நேரம் தெரிந்து, திரும்பி வந்தாள்

'உங்கள் வேலையைவிட மாட்டீர்களே?' என்ருள்.

'விடச்சொன்னுல் விட்டுவிடுகிறேன். எனக்குக்கூட இது பிடிக்கவில்லை' என்றேன்.

'நான் உங்கள் எழுத்து வேலையைச் சொல்லவில்லை. எழுத்திலே செய்யும் குறும்பு வேலையைச் சொல்கிறேன்,' என்ருள்.

'குறும்பு, உப்பு போல - உப்பில்லா பண்டம் குப்பையிலே' என்றேன்.

'நாரத்தை மரம், உங்களை என்ன செய்தது?' என்ருள்.

'என்ன செய்ததா, நல்ல சிந்தனையைக் கிளப்பிவிட்டது' என்றேன்.

'**மரம் சொன்ன கதை**' அப்பப்பா, உங்கள் கண்களில் படும் சிறு துரும்புகூட, எவ்வளவு பெரிய பெரிய உண்மைகளை கூறிவிடுகின்றது' என்ருள்.

'அதற்குள்ளாக அதைப் படித்துவிட்டாயா?' என்றேன்.
'வேறென்ன வேலை எனக்கு?' என்ருள் நிலா.

○ ○ ○

# மரம் சொன்ன கதை.

மனிதர்களின் கதைகளையே மக்கள் கேட்பதில்லை. மரத்தின் கதையை யார் கேட்கப் போகிறார்கள்?

நான் பிறந்த கதையைக் கூறுவதா? வளர்ந்த கதையைக் கூறுவதா? அல்லது வாழ்விழக்கப் போகும் கதையைப்பற்றிக் கூறுவதா?

என் பெயர் நாரத்தை. நான் பிறந்த கதையே விசித்திரமானது. என் தந்தை ஒரு காக்கையென்றுதான் சொல்லவேண்டும். காக்கை எச்சமிட்டது. அதில் வழுக்கி விழுந்த கருதான், பூமித்தாயின் வயிற்றில், முளையாகியது. பிறகு தாயின் வயிற்றிலிருந்து தலையை நீட்டினேன். தாயின் மடியில் செடியாகி வளர்ந்தேன்.

அதே தோட்டத்தில், எனக்கு எதிரியாக ஒரு பசுவுமிருந்தது. 'அதற்கு என்னை எப்பொழுதும், அடித்துக் கடித்து அழ வைப்பதிலேதான் நாட்டம். அந்தப் பசுவை, வீட்டிலுள்ளோர் அனைவருமே அதட்டுவர் — ஓட்டுவர். அதன் கொட்டம் அடங்காததால், என்னைச் சுற்றி வேலி கட்டிக் காத்தனர்.

நான் காண்பார் கண்டு காமுறும் வகையில், தளதளவென, பசுமை நிறம் பளபளவென ஒளிவீச வளர்ந்தேன்.

இந்தப் பருவத்தில், வீட்டிலுள்ளோர், என்னை மிகவும் அக்கறையாக வளர்த்தனர். காலை, மாலை, நீர் ஊற்றினர். எருவிட்டனர்.

வளர்ந்தேன். என் பருவ எழில், பூவிட்டவுடன், இன்னும் அதிகமாகிவிட்டது. பூ, பிஞ்சாகும் நிலையில், திடீரென வாட்டம் வந்தது. என் மனம் துணுக்குற்றது. இலை

கள் வாடின. பூக்கள் உதிர்ந்தன, கிளை உலர ஆரம்பித்தது. ஏன்? காரணம் தெரியவில்லை. முதலில், தீட்டு நீர் என்னை இப்படி தீய்த்தது என்றனர். வேரில் பூச்சு வைத்துவிட்டது என்றனர். எப்படியோ என் எழில் குறைய ஆரம்பித்தது. வாழ்வு இருள ஆரம்பித்துவிட்டது. இனி நான் உயிருடன் இருப்பேனா, அல்லது பட்டுத்தான் போவேனா?

நான் பட்டுப் போகாமல் காக்க, இந்த வீட்டுத் தலைவி படாத பாடு படுகிறாள். தண்ணீரும், எருவும் போடுகிறாள்.

பூத்துக் குலுங்கும் நேரத்தில் இப்படிப் பட்டுப்போனால், யார்தான் என்ன செய்யமுடியும்? உலகத்தின் கவனம் என் பக்கம் திரும்புமா?

பருவ எழில் பரிபூரணமாக உள்ள ஒரு மங்கை, மணந்து, மணம் வீசவேண்டிய நேரத்தில், கணவனை இழந்துவிட்டால் என் செய்வாள்? அந்த மங்கைக்கும் எனக்கும் வேற்றுமையே இல்லை.

  

இந்தக் கதையைப் படித்துவிட்டுத்தான் அவள், என் கண்களில் படும் சிறு துரும்பும் கதைசொல்லும் என்றாள்.

நாரத்தை, தன் கதையை ஒரு பெண்ணின் வாழ்வோடு ஒப்பிட்டுக் கூறுவதுபோல்தான் நான் எழுதியிருந்தேன். என்ன காரணமோ, எனக்குத்தெரியவில்லை. எனக்கு நாரத்தை மரத்தை நினைக்கும்பொழுது, பக்கத்து வீட்டுப் பெண்ணின் கவனம் வந்தது.

கதையைப் படித்த நிலா, தோட்டத்திற்குச் சென்றாள். நாரத்தை மரத்திற்கு 'உபசரணை' செய்தாள்.

நானும் அவள் பின்னுலேயே சென்றேன். நாரத்தையைப் பார்த்தேன். அதன் வாடிய இலைகள், காற்றில் அசைந்து எனக்கு நன்றி தெரிவித்ததுபோலிருந்தன. அவைகளின் சோகக்கதையை உள்ளது உள்ளவாறு எழுதியிருந்தேன் அல்லவா?

* * *

கலாவும், மாலாவும் ஒரு கொத்தில் உள்ள இரண்டு மலர் மொக்குகள். அவர்கள் தான், எனக்கு மாலை நேரத்தில் பொழுது போக்க உதவுபவர்கள். உலகத்திற்கு நான் கதை சொல்பவன் -- ஆனல் எனக்கு இந்த இளம் சிட்டுகள் கதை சொல்வதைக் காண்பவர்கள் சிரிப்பார்கள்.

மாலா, கதை சொல்வதில் கெட்டிக்காரி. கலா? சொல்லத் தெரியாவிட்டாலும் குளறியடித்துக்கொண்டு எதையாவது சொல்வாள்.

நான் உள்ளே நுழைந்ததும், அவர்கள் இருவரும் என் எதிரில் வந்தார்கள். ரேடியோவைப் போல, செய்திகள் சொல்ல ஆரம்பித்தார்கள். மாலாதான் சொன்னுள்.

......இது ஆல் அடுப்பங்கரை ரேடியோ—செய்திகள்—வாசிப்பது மாலாதேவி. இன்று காலையில் நாங்கள் மூவரும் விளக்கெண்ணெய் குடித்ததால், சூடான இட்லியும், ஜோரான சட்னியும் சாப்பிட முடியவில்லை, புளிக்கும் வெந்நீர், அதாவது, ரசமும், அரப்பு, அதாவது, பருப்புத் துவையலும்தான் சாப்பாடு. மாலையில் அடையும், காபியும் உண்டு. மாமாவுக்கு மற்றொரு ருசிகரமான செய்தி, நம் வீட்டு மாடு, கன்னு போடப் போவுது, அடுத்த வீட்டு வாத்தியாரம்மா, நம் வீட்டுக்கு வந்தாங்க—இன்னும் முக்கியமான செய்தி, அந்த வாத்தியாரம்மா, எங்க பள்ளிக்கூடத்திலேதான் வேலை

பார்க்கிருங்க. இப்பொழுது நீங்கள் கேட்டது ஆல் அடுப்பங்கரை ரேடியோ......

இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில், நான் குறுக்கில்

......இன்றைய கடைசி நேரச்செய்தி - மாமா அவர்கள் அலுப்பாக வந்திருப்பதால், சத்தம் போடாமல் இல்லாவிட்டால், கலா, மாலா, இருவருக்கும், சரிபங்காக, இரண்டிரண்டு பெரப்பம் பழங்கள் தரப்படும்...... என்று கூறினேன்.

அந்த இரண்டு சிட்டுகளும் வெளியில் விளையாடப் பறந்தன. நான் வழக்கம் போல், சாய்வு நாற்காலியை வாசலில் போட்டுவிட்டு, வானத்தைப் பார்த்தேன்.

நிலா அடையும் காபியும் தந்தாள். சாப்பிட்டபடியே என் சிந்தனை சுழன்றது.

'நிலா, பக்கத்துவீட்டுப் பெண் இங்கு வந்தது உண்மைதானு?'

'ஆமாம்'

'என்ன காரணம்?'

'பக்கத்து வீடு என்பதுதான் காரணம்,'

'என்ன பேசினீர்கள்?'

'ஏதோ கேட்டாள்—நான் ஏதோ பதில் சொன்னேன்.'

'அந்த 'ஏதோ' என்னவென்றுதான் கேட்கிறேன்'

நிலா, அவர்கள் பேசிக்கொண்டவைகளை என்னிடம் ஒப்புவித்தாள். ஒரு எழுத்துகூட விட்டிருக்கமாட்டாள். என்றே கருதுகிறேன். ஏனெனில், வழக்கறிஞர்கள் கூட கேட்கமாட்டார்கள், அவ்வளவு 'கிராஸ்' கேள்விகளை—நான் கேட்பேனே!

அவள் கூறியதிலிருந்து, பக்கத்து வீட்டுப் பெண்ணின் பெயர் **மரகதம்** என்று தெரிந்து கொண்டேன். மரகதம், கலா, மாலா இருவரும்பயிலும் நால்வர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் சித்திரம், தையல், குடும்பக் கலை பயிற்றுவிக்கும் ஆசிரியை. நால்வர் பள்ளி என்ருல் அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரைக் குறிப்பதாக வைத்துக்கொள்ளலாம். அல்லது, அதனைக் கட்டிய, நாட்டுக்கோட்டை செட்டியார் வகுப்பைச் சேர்ந்த தொள்ளைகாது செட்டியார் சகோதரர்கள் நால்வரையும் வைத்துக் கொண்டாலும், வைத்துக்கொள்ளலாம். அல்லது அந்தப் பள்ளிப் பெண்கள் பள்ளியாதலால், வைதீகக் கருத்துப்படி, பெண்களுக்குரிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற பண்புகளை வைத்துக் கொள்ளலாம். அந்தப் பள்ளியில் ஆசிரியர் வேலை பார்ப்பது மிகவும் கடினம். ஏனெனில், அதை ஒரு மதப் பிரச்சார நிலையமாகவே நடத்தி வந்தார்கள். அதற்கு மாருன எண்ணங்கொண்டவர் வந்துவிட்டால், தொல்லையாகத்தானிருக்கும்.

மரகதத்தின் சொந்த ஊர் மலைக்கோட்டையாம், தாயார்மட்டும் உண்டாம். அவள், தன் மகன் வீட்டோடு இருக்கிருளாம், மரகதத்தை, அவள் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அக்கரையோடு கவனிப்பதில்லையாம்.

சமையல் செய்ய ஒரு வேலைக்காரக் கிழவி மட்டும் கூடவே இருக்கிருள். அவள் பெயர் **அலமேலு.** அவள் தான், மரகதத்தின் தாய்போல.

ஒரு நாள் உரையாடலில், நிலா சேகரித்த தகவல் கள் இவ்வளவுதான்—இனி, நானே கூட, தகவல்கள் சேகரிக்கக்கூடும் அல்லவா?

* * *

அலுவலகத்திலும் சரி, வீட்டிலும் சரி, அல்லது வெளியில் சென்ருலும் சரி - எங்கும் மரகதத்தின் நினைவு எனக்கிருந்தது.

நீங்கள் தவறுதலாக நினைத்துக்கொள்ளவேண்டாம். காதல், கத்திரிக்காய் என்று அனர்த்தம் செய்துகொள்ள வேண்டாம். அவளின் சோகமுகத்தின் பின்னல் மறைந் திருக்கும், அவலக் கதையென்னவென்று அறிவதிலே அவ்வளவு ஆர்வம்.

என்னை, என் எழுத்தை, என்னல் படைக்கப்பட்ட இலக்கியங்களை கண்டுணர்ந்தவர்களுக்குத் தெரியும். மர கதத்தினல், ஒரு சாகாத இலக்கியம் பிறக்கப்போகிறது என்பதை. இதனை நானே கூற வேண்டியிருப்பதால், தற்பெருமையென்று நினைத்துவிடாதீர்கள். உண்மையிலே அதுதான்.

நான் அரும்பு எழுத்தாளனக இருந்த நேரத்தில் கூட, எழுதும் கதைகளில் வரும் பாத்திரங்கள் உயி ருள்ளவர்களாகவே இருப்பார்கள். சிலர் கூறுவது போல, என்னல் 'சொந்த' கற்பனைகளை எழுப்ப முடியாது. ஏதாவது ஒன்றைப் பார்த்து நினைத்து, அதனையே அடிப்படையாக்கி எழுதமுடியும். ஆனல், அடிப்படைகளை, வாழ்க்கை சம்பவங்களைப் பார்த்து அமைத்துக்கொண்டு கற்பனையை எழுப்புகிறேன். வேறு சிலர் இளங்கோவை, ஷேக்ஸ்பியரை ரெயினுல்ட்ஸை, ஆஸ்கார் ஒயில்டை—இப்படிப் பேராசிரியர்களின் எழுத் துக்களை அடிப்படையாக்கிக் கொள்கிருர்கள். இவர்கள் கொஞ்சம் சுறுசுறுப்புள்ளவர்கள். ஆகவேதான் அடிப்

படைக்காக, ஆயிரக்கணக்கான மைல்கள் தாண்டிப் போகிறார்கள். வேறுசிலர், சோம்பேறிகள் இந்தத் தூரம் கூடப் போகாமல், நாற்பது மைல் ஐம்பதுமைல் தொலைவிலேயே அடிப்படை தேடுகிறார்கள். அதாவது, பக்கத்திலுள்ள பேராசிரியர்களின் கற்பனைகளை அடிப்படையாக்கிக் கொள்கிறார்கள்.

இந்த நேரத்தில் புராணக் கதையொன்று நினைவிற்கு வருகிறது. பரமசிவனும், பார்வதியும் தம் மக்களாகிய முருகனையும், விநாயகரையும் அழைத்து, 'யார் முதலில் உலகத்தைச் சுற்றி வருகிறார்களோ, அவர்களுக்கு இந்த மாங்கனி' என்று கூறினார்கள். முருகன் உடனே மயிலை அழைத்துக் கொண்டு புறப்பட்டான். விநாயகனோ, தந்தை, தாயை மூன்று சுற்று சுற்றினான். 'அம்மையே, அப்பனே நீங்கள் தான் உலகம், உங்களைச் சுற்றினாலே, உலகத்தைச் சுற்றியதாகும்' என்று கூறி, கனியைப்பெற்றான். உலகத்தைச் சுற்றிய முருகன், திரும்ப வந்து ஏமாற்றத்தோடு நின்றான். அந்த கோபத்தோடுதான், கோவணமுமின்றி, மலையேறி மறைந்துகொண்டானாம்.

அடிப்படை தேட, முருகன் முறையொன்று. விநாயகர் முறையொன்று. இரண்டாவது முறைதான் என்னுடையது.

மரகதத்தின் வாழ்விலே, ஏதோ ஒரு வாழ்க்கைத் தத்துவம் மறைந்திருப்பதாக என் மனம் கூறியது.

அலுவலகத்தில் அதற்கேற்றாற்போல், எனக்கு வந்திருந்த கடிதங்களில், ஒரு கடிதம் எனக்கு வியப்பையளித்தது. அதன்மேல் உள்ளூர் என்று போடப்பட்டிருந்தது. அதைப் பிரித்தேன்.

அதில்......நான் எழுதும் பயிற்சி பெற்றவள். தங்கள் 'வாழ்க்கை'யில் எழுத விழைகிறேன். இடம் கிடைக்குமா?......................மரகதம்................

இப்படி இருந்த கடிதத்தை, எடுத்து என் பையில் வைத்துக்கொண்டேன்.

மாலையில், நிலாவிற்கு, இக்கடிதத்தைக் காட்ட வேண்டும் என்ற எண்ணத்தோடு இல்லம் வந்து சேர்ந்தேன்.

நிலா, பட்டுப் போகப்போகும் மரத்திற்கு 'வைத்தியம்' செய்து கொண்டிருந்தாள்.

* * *

நிலாவிடம் கடிதத்தைக் காட்ட, என் பையிலிருந்த கடிதத்தை எடுத்தேன். அவள் ஒரு கட்டுக் காகிதத்தை எடுத்துவந்தாள்.

கடிதத்தை அவளிடம் கொடுத்தேன். அந்தக் காகிதச் சுருளையை என்னிடம் தந்தாள்.

அவள் அதைப் பிரித்தாள். நான் இதைப் பிரித்தேன்.

அவள்முகம் வியப்பால் விரிந்தது. என் முகம் ஆச்சரியத்தால், அகலமாகியது.

மரகதம், கடிதம் எழுதியிருப்பாள் என்று நிலா கருதவில்லை. மரகதம், இவ்வளவு அருமையாக எழுதுவாள் என்றும் நான் எதிர்பார்க்கவில்லை.

'என்னிடம் சொல்லவில்லையே' என்றாள் நிலா.

'என்னிடம்கூட நீ சொல்லவில்லையே' என்றேன் நான்.

'என்ன' என்றாள் அவள்.

'என்ன' என்றேன் நான்.

'விளையாடாதீர்கள். மரகதம் கடிதம் எழுதினதாக கூறவில்லை. ஆனால், இந்த கதையை உங்களிடம் காட்டச் சொன்னாள்' என்றாள்.

'விளையாடாதே—மரகதம், இவ்வளவு அருமையாக எழுதக்கூடியவள் என்று கூறவில்லையே!' என்றேன்.

'எனக்கு சோதிடம் தெரியாதே!' என்றாள்.

'எனக்கும் ஆரூடம் புரியாது!' என்றேன்.

பிறகு, நிலா, மரகதம் வந்து பேசியிருந்த விபரங்களைக் கூறினாள். நான் அவள் பேச்சை ஒற்றைக் காதில் வாங்கிக் கொண்டு, அந்தக் கதையினுள் நுழைந்தேன்.



# மரம் சொல்ல மறந்த கதை.

பூவும், பிஞ்சுமாக பூரிப்போடு வாழவேண்டிய நேரத்தில், பட்டுப்போய்விட்டேன் என்றே வைத்துக்கொள்ளுங்கள். நான் மக்களுக்குப் பயன்படுவேன்.

நாரத்தை மரமானாலும், சமையல் அடுப்பெரிக்கும் விறகாகவாவது உபயோகப்படுவேன். ஆனால், என்னையொத்த மனித சாதியைச் சேர்ந்த பெண் ஒருத்தி என் நிலையில் பட்டுப்போனால், அவள் கதி மோசமானது. மனித குலம் என்று பெயரே தவிர, மரக்குலத்தை விட மட்டமான எண்ணமே கொண்டவர்கள். அந்தப் பெண்ணை மூலையில் உட்காரவைத்து ஒன்றுக்குமே பயன்படாத உருப்படாத கழிவுப்பொருளாகவே ஆக்கிவிடுவார்கள்.

குழந்தைகளுக்குக் கூடப் பாட்டுச்சொல்லித் தருவார்களே—'பனைமரமே! பனைமரமே ஏன் வளர்ந்தாய்? பனைமரமே!' என்று குழந்தைகள் கேட்கும் கேள்விக்கு பனைமரமே பதில் சொல்லும் வகையில் பாட்டு அமைந்திருக்கும். 'நான் வளர்ந்த காரியத்தை நாட்டாரே சொல்லுகிறேன்; படுக்க நல்ல பாய்ஆவேன்; வசிக்க நல்ல வீடாவேன்; கட்ட நல்ல கயிறுவேன்; கன்று கட்டத் தும்பாவேன்; வெட்ட நல்ல விறகாவேன்; வீடுகட்ட மரமாவேன்; சித்திரைக் கோடையிலே சிறந்த நல்ல நுங்காவேன்; நனைந்துவரும் பேர்களுக்கு நல்ல குடை நானுவேன்; பசித்துவரும் பேர்களுக்குப் பனம்பழமும் நானுவேன்; வர்த்தகரும் செட்டிகளும் வழியறிவதென்னுலே, ஏரிக்கரை மீதினிலே எந்நாளும் வீற்றிருப்பேன்' என்று கூறுவது குழந்தைகளுக்கு குதூகலம் அளிப்பது மட்டுமல்ல, பெரியவர்களுக்கு நல்ல பாடமாகும்.

மனிதரிலே நாங்கள் உண்டு என்பதை, பழங்கால நூல்கள் உணர்த்தும். அவை நடுவே நீட்டோலையின் குறிப்பறிய மாட்டாதவன் நன்மரம் என்று கூறியுள்ளனர். மரத்திலேயே நன்மரம் என்று அழுத்தந் திருத்தமாகக் கூறியுள்ளனர். ஆகவே மனிதரிலே நாங்கள் இருக்கிறோம்.

மரமண்டையர் என்கிறோம். மரக்கட்டைபோல நிற்கிறுன் என்கிறோம். மனிதரிலே, எங்கள் குலத்தவர் கலந்திருக்கின்றனர் என்பதற்கு இவை சாட்சிகள்.

எங்களிடையே சில மனிதர்களும் இருக்கிறுர்கள் மனிதருக்கு நன்றியுணர்ச்சி மங்கிக்கிடக்கிற இந்நாளில், சாக்கடை நீரை, கால்வழியே விடுவதற்காக, தென்னை, தலையாலே, இளநீரைத் தந்து நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறது. ஆகவே, மனிதரிலே புனிதர் என்றுதான் தென்னையைக் கூறவேண்டும்.

நான் இடையிலே பட்டுப்போனுலும், வெட்டுப்பட்டாலும், அதிகக் கொடுமைகளை அனுபவிப்பதில்லை. உலகத்தில் உருப்படாத பொருளென நினைக்கப்படுவதுமில்லை.

ஆனால் என்னையொத்த பெண், பட்டுப்போனாலும், கருகிப் போனாலும், சமூகத்தில் நடமாடவே அருகதையற்றவள் என்று ஒதுக்கி வைத்துவிடுகிறார்கள். பட்டுப்போனதற்குக் காரணம் என்ன? யாரும் ஆராய்வதில்லை. கருகிப்போன திற்கு யார் பொறுப்பாளி? யாரும், கேட்பதில்லை. ஆனால் அந்தப் பெண்ணைக் குற்றவாளியாக்கி உட்காரவைத்து விடுகிறார்கள்.

நான் திடீரென சாய்ந்துவிட்டேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். புயல் அடித்ததா என்று கேட்பர். கருகி விட்டேன் என்று வைத்துக்கொண்டால் வெப்பக்காற்று அடித்ததா என்று கேட்பர். இருந்த நிலையில் பட்டுப்போனால், வெவ்வேறு காரணங்கள் தேடுவர். ஆனால் ஒரு பெண்ணுக்கு இத்தகைய காரணங்களைத் தேடமாட்டார்கள்.

மனித சாதியில் மரங்கள் அதிகம் கலந்துவிட்டன. மரசாதியில் மனிதர்கள் அதிகம்கலந்து விட்டனர். ஆகவே தான் மரநீதி மனிதருக்கு இருக்கவேண்டிய நீதிபோல் இருக்கிறது. மனித நீதி, மரநீதியைவிட மட்டமாக இருக்கிறது. பெண்ணாகப் பிறப்பதைவிட என்னைப்போல மரமாக பிறந்தாலும் பரவாயில்லை.

O O O

மரகதம் தீட்டிய, மரக்கதை, எனக்கு மலைப்பைத் தந்தது. எழுதுவது என்பது, பஜனை மடத்தில், கூடையிலிருக்கும் சுண்டலை, அள்ளித் தருவது போன்ற தில்லை. அது உணர்ச்சியில் ஊறிக்கிடக்கும் எழுத்துக்களை எடுத்து கோர்த்து தரும், வேலை. அதுவும், எழுதுபவரின் உள்ள உணர்ச்சிகள், அவர் எழுத்துக்களில் மின்னலிடும்.

மரகதம் எழுதிய கதையிலும், அவளின் மனத் துயர் மறைந்திருப்பதாகவே கருதினேன்.

# பட்ட மரம்

காதல்காவியம் தீட்டும்பொழுது, ஆசிரியர், காதல் வனத்தில் உலவினால், 'அக்காவியத்திற்கு இரட்டை உயிர் வந்துவிடும். எழுத்து தரும் உயிர் ஒன்று—அவர் வாழ்க்கை உண்மை தரும் உயிர் ஒன்று!

மரகதத்தின் துயரந்தோய்ந்த கண்களில் கரைந்து மறைந்திருக்கும் வாழ்க்கைச் சிக்கலை அறிய, இந்தத் துண்டுக்கதை துணைபுரியுமென்றே எண்ணினேன்.

மேலும், அவள் 'வாழ்க்கை'யைத் தொடர்ந்து படிப்பவள் என்றும் தெரிகிறது. நான், 'மரம் சொன்ன கதை' என்று தீட்டியிருந்ததைத் தொடர்ந்து, 'மரம் சொல்ல மறந்த கதை' யென்று எழுதியிருந்தாள்.

அடுத்தவார 'வாழ்க்கை'யில் வெளியிடுவதென முடிவு செய்தேன். அலுவலகத்திற்கு வரும் கதை கட்டுரைகளை, வீட்டிற்குக்கொண்டு வந்துதான் படிப்பது வழக்கம். அவைகளில், அச்சேறக்கூடியவைகளைத் தனியாகப் பொறுக்கியெடுத்துக் கட்டி வைத்திருப்பேன். அவைகளோடு, இதையும் வைத்துவிட்டு, மீண்டும் வாசலில் வந்து உட்கார்ந்தேன்.

மரகதத்தின் கதையிலிருந்து நான் அவளைப்பற்றி யூகிக்க ஆரம்பித்தேன்.

அவள் பட்டுப்போனவளா? கருகிப்போனவளா?—அவளைப் பார்த்தால், வாழ்க்கை வளைவுகளை, நெளிவுகளைக் காட்டும், காலக்கோடுகள், அவள் முகத்தில் தெரிகின்றனவே!

மரகதம், இப்பொழுது, கொஞ்சம், கொஞ்சமாக நெருக்கமாகிறாள். விரைவில் அவளுடன் பேசும் வாய்ப்பும் கிடைக்கும். அதன்மூலம், அவள் உள்ளத்தை உணரமுடியும்!

## பட்ட மரம்

பெண்ணின் உள்ளத்தை பெருங் கடலென்று கூறு வர். கடலாக இருந்தால், அதனைப் பவழக்கடல், முத்துக் கடலாகவே நான் கருதுகிறேன். முழுகி பவழத்தையும், முத்தையும் எடுக்கிறேன்.

இப்படி எண்ணிக்கொண்டிருக்கையில், நிலா, இரவு உணவுக்கு அழைத்தாள்.

*　　　　*　　　　*

அலுவலகத்தில், ஆசிரியர் அம்பலவாணர் வந்திருந்தார். ஆடிக்கொருமுறை, அமாவாசைக்கொருமுறை என்று கூறுவார்களே, அந்த மாதிரிதான் அவர் அலுவலகம் பக்கம் வருவார்.

வேண்டுமென்று அப்படியிருப்பதில்லை. அவர் பல வேலைகளைச் செய்ய வேண்டியவர். அவருக்கு 'வாழ்க்கை' அலுவலகம் சொந்தம். மற்றவைகளில் பங்குதாரர்—மேற்பார்வையாளர்.

அவர், ஐந்தாறு பாங்குகளுக்கு டைரக்டர். ஒரு இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் தலைவர். நகராண்மைக் கழகத் தலைவர். இப்படி அவர் அலுவல்கள் அதிகம்.

அவர் அலுவலகத்திற்கு வந்திருக்கிருரென்ருல், எல்லோரும் 'கடுபிடி'யென்று வேலைகளைப் பார்த்துக் கொண்டுதானே இருப்பர்!

துணையாசிரியர் — நிர்வாக ஆசிரியர் — எல்லாம் நான்தானே. ஆகவே, அன்று அச்சுக்கோர்க்க கொடுக்க இருந்த கவிதை, கட்டுரை, கதைகளை ஆசிரியர் பார்வைக்கு வைத்தேன். எதிரில் கிடந்த நாற்காலியில் உட்காரச் சொன்னுர். உட்கார்ந்து கொண்டேன்.

மதிவாணன் எனும் இளங் கவிஞர் ஒரு கவிதை தீட்டியிருந்தார். 'மனித மனம், ஒரு மர்மக் குகை'

என்று தலைப்பிட்டிருந்தார். அந்தக் கவிதையில் அவர் கூறியிருந்த கருத்து இதுதான் — ஒவ்வொரு மனிதனும் தன் மனதில் இரண்டொரு இரகசியங்களையாவது போட்டுப் புதைத்து வைத்திருக்கிறன் என்பதாகும். இதைப் பார்த்தவுடன், அவர் முகம் மாறியது.

வாழ்க்கையில் நாம் ஒன்று நினைக்கிறோம் — நாம் நினைக்கிற மாதிரியில் நடப்பதில்லை. வைதீக எண்ணங் கொண்டவர்கள் 'நாம் ஒன்று நினைக்க-தெய்வம் ஒன்று நினைக்கும்' என்பர். நாம் நினைப்பதையே, தெய்வத்தை யும் நினைக்கவைக்க வேண்டும். அதுதான் மனித முயற்சி. வள்ளுவப் பெருந்தகை, 'தெய்வத்தான் ஆகாது எனி னும் முயற்சிதன் மெய்வருந்தக் கூலி தரும்' என்று கூறி யுள்ளார். எந்தக் காரியம் நடந்தாலும், அதற்கு காரண மாக, மனித முயற்சியைக் கூறுவதில்லை, நம்மில் பலர். தலைவிதியென்பர் சிலர். முன்வினைப் பயன் என்று கூறு வர் சிலர். பிர்மலிபி அப்படி—அன்று எழுதிய எழுத்தை அழித்தா எழுதமுடியும் என்பர். இவைகளைக் கண் டித்து வள்ளுவர் 'ஊழையும் உப்பக்கம் காண்பர் உலை வின்றித் தாழாது உஞற்றுபவர்' என்று கூறியுள்ளார், இந்த நிலைமையை வைத்து, மனிதன் செய்யும் தவறு, அடையும் தோல்விகளுக்கு, ஆண்டவன், தலைவிதி இவை களின் மீது பழியைப் போடுவது கூடாது. அதுபோல் வெற்றிக்கும், நன்மைக்கும், அவர் அருள், இவர் கருணை என்று கூறவேண்டியதில்லையென்று காட்டி, 'மனித நடவடிக்கை' என்றொரு கட்டுரை தீட்டினேன். அதனை யும் படித்து முடித்தார்.

அடுத்து, மரகதத்தின் கதையைப் படித்தார். அவர் முகம் மாறியது. அவர் கண்கள் வியப்பைக் கொப்பளித்தன. அந்தக் கதையைப் படித்துமுடித்து விட்டு, புரட்டிப்புரட்டிப் பார்த்தார். அதாவது, எழுதியவர் முகவரியைத் தேடினர்.

'புத்தர், இந்தக்கதை ஏது?'

'தந்தது'

'தந்ததா—வந்ததா?'

'தந்ததுதான்—இதை எழுதிய பெண் நால்வர்பள்ளி யாசிரியை—பெயர் மரகதம்,'

'இந்தப் பெண் எங்கு இருக்கிருள்? எப்படி உனக்குத் தெரியும்? கதை கிடைத்த கதை யென்ன?'

'பக்கத்து வீட்டிலே குடியிருக்கிருள்—அதனுல் என் மனைவிக்குப் பழக்கம்—அவள் என் மனைவி மூலம் இந்தக் கதையைத் தந்தாள்.'

'இந்தக் கதை பிடிக்கிறதா?'

'உருவகக் கதையை நம் 'வாழ்க்கை'யில் ஒரு முக்கிய பகுதியாக வைத்திருக்கிறேன். சென்ற வாரம் நான் எழுதியிருந்தேன்—இந்தக் கதை அதன் தொடர்ச்சி. மிக அற்புதமாக இருக்கிறது.'

'எனக்குப் பிடிக்கவில்லை'

'ஏன்?'

'காரணம் தேவையில்லை—இதை வெளியிடவேண்டாம்.'

எனக்கு ஆசிரியர் அம்பலவாணரின் போக்கு புரியவில்லை. என்றைக்குமே, இம்மாதிரி கூறியதில்லை. எனக்கு கோபம் வந்தது. நான் படித்து தெரிந்தெடுத்த ஒருகதையை இவர் எப்படிமறுக்கலாம் என்று என்மனம் கேட்டது. அப்படியானுல், சில அலுவலகங்களில் பெண் பெயர் போட்டு எந்தக் 'குப்பை' வந்தாலும் அச்சிட்டு விடுகிருர்களே, அந்த 'மனப்பான்மையை'க் கொண்ட

வனு? எனக்கு அவருக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. நான் என் இடத்திற்கு வந்து சேர்ந்து விட்டேன். எனக்கு வேலையே ஓடவில்லை. மரகதம் கதைக்கும், ஆசிரியர் அம்பலவாணரின் மறுப்புக்கும் ஏதேனும் தொடர்பிருக்குமோ என்று கேட்டது, என் சுழலும் சிந்தனை.

* * *

வீட்டினுள் நுழைந்தேன்—வாசலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தவர் இருவரும் எழுந்து நின்றனர். அவர்களில் ஒருத்தி நிலா—மற்றொருத்தி மரகதம் என்று கூறவேண்டியதில்லை.

'வணக்கம்' என்ருள் மரகதம்.

'வணக்கம், அமருங்கள்' என்றேன் நான்.

'மரகதம்—பக்கத்துவீடு' என்று அறிமுகம் செய்து வைத்தாள் நிலா.

பிறகு இருவருக்கும் காபி தந்தாள் நிலா. மரகதத்தையும் உட்காரச் சொல்லிவிட்டு, வழக்கம்போல் சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன்.

'இதற்கு முன்னுல் எங்கு இருந்தீர்கள்?'—என் கேள்வி.

'கரூரில்'—அவள் பதில்.

'தாங்கள் மட்டும் தனியாகத்தானிருக்கிறீர்களா?'—நான் கேட்டேன்.

'தனியானவள், தனியாக இல்லாமல் எப்படி இருப்பது?'—அவள் கண்களில் நீர்தேங்க ஆரம்பித்துவிட்டது.

'உற்ருர், பெற்ருர்......' என்றேன்.

'எல்லாம் செத்துவிட்டவர்களாகவே போய்விட்டனர், என்னைப் பொறுத்த மட்டில்' என்ருள்.

'மணமாகவில்லையா?' என்றேன்.

'மரணந்தான் வரவேண்டும்' என்ருள்.

அவள் பதில்கள், எனக்கு மேலும், மேலும், அவள் வாழ்க்கை சூழற்சிகளில் அதிக நாட்டத்தை ஊட்டின.

'துணைக்கு யார் இருக்கிருர்கள்?' என்றேன்.

'துணையற்ற எனக்குத்துணை, அலமேலுதான்' என்ருள்.

'ஏன் நீங்கள் துணையோடு வாழக்கூடாது?' என்றேன்.

'துணை—எனக்கா—இனிமேலா—கிடையாது!' என்ருள்.

இப்படி பேசிக் கொண்டிருக்கையில், அவளையுமறியாமல் கண்களிலிருந்து, கண்ணீர் வழிந்தோடியது. ஆகவே, நான் பேச்சை வேறுபக்கம் திருப்பினேன்.

'தங்கள் கதை மிகவும் உயர்தரமாக இருந்தது' என்றேன்.

'பாராட்டுதலுக்கு நன்றி' என்ருள்.

'ஆனல் வெளியிட முடியாமைக்கு வருந்துகிறேன்' என்றேன்.

'இம்மாதிரி நிலையாக அச்சிட்ட் விடைத்தாள்கள் இருக்குமே தங்கள் அலுவலகத்தில்' என்ருள்.

'மரகதம் அம்மையே, தவறுதலாக நினைக்கக் கூடாது. நான் வெளியிடுவதற்காக எடுத்து வைத்திருந்தேன். என்றுமில்லாமல் அன்று ஆசிரியர் அம்பலவாணர் வந்தார். அச்சிடவேண்டிய கவிதை கட்டுரைகளைப் பார்த்தார். தங்களுடையதை மட்டும், அச்சிட வேண்டாமென்று தடுத்துவிட்டார்' என்றேன்.

'ஓ, அவர் பார்த்துவிட்டாரா?' என்ருள்.

'என்ன, அவர் பார்த்தால் மறுத்துவிடுவார் என்று தெரியுமா?' என்றேன்.

அவள், தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டவள் போல, 'இல்லை பெரிய ஆசிரியர்கள் போக்கே அப்படித் தான்' என்ருள்.

'இல்லை, அவர் தங்கள் கதையை, ஒரு தடவைக்கு இரண்டு தடவை படித்தார்—படித்த பிறகு, தங்களைப் பற்றி விசாரித்தார். கதை கிடைத்த விதம், குடியிருப் பிடம் எல்லாம் கேட்டுக்கொண்டார். பிறகுதான் மறுத்துவிட்டார்' என்றேன்.

'கதையை இப்பொழுது மறுத்துவிட்டார்.....' என்று மேலும் எதையோ சொல்லவந்தவள் 'டக்'கென்று நிறுத்திக்கொண்டாள்.

எனக்கு, அவள் பேச்சு, பார்வை, எல்லாம் வியப்பைத் தந்தன. அம்பலவாணரை, அவள் ஏற்கனவே அறிந்திருப்பாளோ என்றுகூட எண்ணினேன். அப்பொழுது தெருவில் வண்டி சத்தம் கேட்டது

சமையல் வேலைக்கார அலமேலு வந்தாள்.

'அம்மா, உங்களைத் தேடிக்கொண்டு, இரண்டு ஆம்புளைக வந்திருக்காவோ' என்ருள். அவள் பேச்சு திருநெல்வேலி பக்கத்தைச் சேர்ந்தவள் என்பதைக் காட்டிக் கொடுத்தது.

'வணக்கம் — நான் போய் வருகிறேன்' என்று மரகதம் போய்விட்டாள். நிலா, அவள் பின்னுலேயே சென்று, வழியனுப்பினுள். அவள் தெரு வாயிற்படியிலிருந்து எட்டிப் பார்த்தாள். இரண்டு வாலிபர்கள், பக்கத்து வீட்டு வாசற்படியில் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களின் பெட்டி, படுக்கைகள் திண்ணையில் இறக்கி வைக்கப்பட்டிருந்தன. அவர்களை ஏற்றிவந்த வண்டி திரும்பிப் போய்க்கொண்டிருந்தது.

* * *

நான் அலுவலகத்தில், என் வேலைகளில் புதைந்து கிடந்தேன். என்னைத் 'தூக்கி' விட்டுக் காப்பாற்ற வந்தவர்கள் போலவே இரண்டு வாலிபர்கள் வந்தனர்.

இருவரில் ஒருவன் முப்பத்தைந்து வயதுள்ளவன், சதைப்பற்றுள்ள உடம்பு – வட்டமான முகம் – அதிலே உதட்டுக்கு மேலே, 'பாண்டிச்சேரி' பாணியில் மீசை. சுருள் சுருளான கிராப் -நீலநிற புஷ்கோட், இடுப்பிலே ஒரு பச்சைக்கரை போட்ட கைலி, காலில் 'கட்' பூட்ஸ்— இன்னொருவன் இருபத்தைந்துவயது நிறைந்தவன். சிவந்த மேனி. பரந்தநெற்றி, சிந்தனைநிரம்பிய கண்கள், வெள்ளை நிறஆடை, முழுக்கை சட்டை, மேலே, மடிப்பு கலையாத துண்டு, காலிலே செருப்பு — இவர்கள் இருவரும் ஒரே நேரத்தில் வணக்கம் தெரிவித்தனர்.

அவர்களுக்கு இருக்கை தந்து உபசரித்தேன். அலுவலகப் பொடியன் சுந்தரம், மூன்று 'கப்' தேநீர் கொண்டு வந்தான். பத்திரிகை நிலையத்து பானமே அதுதான் — மரியாதையும் அதுதான்! சுந்தரம் கொணர்ந்த தேநீரை அருந்தினேம்.

பத்திரிகை நிலையத்தில் விசித்திரமான கடிதங்கள் வரும். சில 'குரங்கு'க்குணம் கொண்ட ரசிகர்கள் உண்டு. அவர்கள், 'டேய், புத்தன், நீ என்ன நினைத்துக்கொண் டாய், நீ பெரிய மேதாவி என்று எண்ணமோ? உன் எழுத்து மகா மட்டம்' என்று எழுதித் தங்கள் 'மேல் தாவி'த்தனத்தைக் காட்டிப்போட்டுவிட்டு, தினந்தினம், 'வாழ்க்கை'யில் என்ன வருமோ என்று ஏங்கிடுவர். தான் போட்ட கடிதம் என்னுகும், எப்படி ஆசிரியர் படிப்பார், என்ன நினைப்பார் என்று கற்பனை செய்து பார்ப்பதிலே அவர்களுக்கு ருசி அதிகம். சிலர், வரட்டு வாழ்த்து அனுப்பிவைப்பர். கடிதங்களைப்போலவே, சிலர் நேரில் வந்து 'போர்' அடிப்பதும் உண்டு. அவர்க ளோடு முகத்தைச் சுளிக்காமல் பேசியனுப்புவது பெருந் தொல்லை. அம்மாதிரி ரகத்தைச் சேர்ந்தவர்களோ, இவர் கள், என்ற எண்ணத்தோடு உரையாட ஆரம்பித்தேன். ஆரம்பத்திலேயே தங்களை அறிமுகப்படுத்திக் கொண் டனர்.

'என் பெயர் **சாரங்கன்**. மளிகை வியாபாரி'

'என் பெயர் **மனோகரன்**. பள்ளியாசிரியன்'

இருவரும் தங்கள், பெயர், தொழிலைக் கூறினர். சாரங்கன் என்பவனே இருவரில் முதியவன். அவன் என்னிடம் மிகப் பழகியவன் மாதிரி சரளமாகப் பேச ஆரம்பித்துவிட்டான்.

'தங்கள் வீட்டுக்குப் பக்கத்தில் குடியிருக்கும் மர கதம் அம்மையார் வீட்டில் தங்கியிருக்கிறோம். மரகதம், எனக்கு தங்கை மாதிரி. கல்லூரியில் படிக்கும் நாட்களி லிருந்து பழக்கம். மனோகரன், எனக்கு நெருங்கிய நண் பன். உயிருக்குயிரானவன். இவன் காரியமாகவே புறப் பட்டு வந்தோம்'—சாரங்கன் கூறினான்.

'வேலை விஷயமாகவா......' என்றேன்.

'தற்சமயம் வேலையில்லை. ஆனால், திருமணம்பற்றி யே புறப்பட்டு வந்துள்ளோம்' என்றான் சாரங்கன்.

'மிக்க மகிழ்ச்சி' என்றேன் நான்.

'திருமணம் பாதி முடிந்தது போலவே!' என்றான் சாரங்கன்.

'பாதியை முடிக்க வேண்டியது யார்?' என்றேன், நான்.

'மணப் பெண்!' என்றான் சாரங்கன்.

இந்த உரையாடலில் மனோகரன் கலந்துகொள்ள வில்லை. நான் மனோகரனிடம் பேசினேன்.

'மிஸ்டர் மனோகரன், தங்கள் திருமணத்திற்கு என்ன தடை?' என்றேன்.

'தடையெதுவுமில்லை. பெண் என் மன எடை தெரிந்தவளாகக் கிடைக்கவில்லை' என்றான்.

'தேடினால், கிடைக்கிறாள்' என்றேன்.

'தேடியலுத்து விட்டேன்' என்றான் சாரங்கன், குறுக்கே.

'ஆகவே, என்ன செய்ய முடிவு செய்துள்ளீர்கள்' என்றேன்.

'முக்கியமான உதவி பெறத்தான் வந்தோம்' என்றான் சாரங்கன்.

'பத்திரிக்கையில் விளம்பரம் வெளியிடவேண்டுமா?' என்றேன்.

'தங்களைப் போன்ற சீர்திருத்த ஏடு நடத்தும் ஆசிரியர்களிடம் அத்தகைய பெண் குறிப்புகள் கிடைக்கும் என்று நம்புகிறேன்' என்றான் சாரங்கன்.

'அப்படியானால், மணமகளையே கேட்கிறேன். தாங்கள் எத்தகைய பெண்ணை விரும்புகிறீர்?' என்றேன்.

'இந்த மரத்தின்மீது படரத்தக்க கொடி' என்றான் மனோகரன்.

எனக்குச் சிரிப்புவந்து விட்டது. இருந்தாலும் அடக்கிக்கொண்டேன்.

'நண்பரே, தங்களை மரமென்று கூறுவானேன்?' என்றேன்.

'கணவனை மரமென்று கூறுவதில் தவறில்லை. மனைவியென்ற பூங்கொடி படர பயன்படும் என்று வேண்டுமானால் கூறுங்கள்' என்றான் மனோகரன்.

'பூங்கொடிக்கு தாங்கள் கூறும் பண்புகள் என்ன?' என்றேன்.

'கொடி, வேர்விட்ட இடத்தைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அக்கொடியில் பூக்கள் அழகாக மட்டுமிருந்தால் போதாது—அறிவு மணம் பரப்புவதாக இருக்கவேண்டும்' என்றான் மனோகரன்.

'பொருள் தருவதாக......' என்றேன் நான்.

'தேவையில்லை' என்றான் அழுத்தமாக.

'இது ஒரு இலட்சியத் திருமணம்—அதனால் கலப்பு மணம் செய்வதென்று முடிவுசெய்துள்ளான் மனோகரன்' என்றான் சாரங்கன்.

திருமணத்தில், இலட்சியத்திற்காக, கலப்புத் திருமணம் செய்கிறேன் என்று கூறுவதில் அர்த்தமில்லை என்பதே என் முடிவு. திருமணம் என்பது இரண்டு மனங்களின் இணைப்பு வேலையாகும். அன்பால், பழக்கத்தால், ஒட்டப்படுவது வேறு. இது மைதா மாவு பசையைப் போல! காதல் என்பது, வஜ்ரம் மாதிரி! ஆனால் கொள்கைக்காக வேறு சாதியில் திருமணம் செய்வது என்பது சோற்றுப்பசையால் ஒட்டுவது மாதிரி! ஏன் இப்படிக் கூறுகிறேன் என்றால், அனுபவத்தின் விளைவு தான். காதலில்லாமலே, சொந்தத்தில், அல்லது தெரிந்த இடத்தில் மணங் கொள்வது, ஒட்டிக்கொள்ள வழியாகிறது. பழக்கம் என்கிற பசை, உலர உறவு, பந்தம் போன்ற பாசக்காற்று வீசுகிறது. ஆனால், தூரத்தில், எந்தவிதமான தொடர்பின்றி திடீர் கலப்பு செய்வது, சோற்றுப்பசையால் ஒட்டப்படுவது போல், மேடு பள்ளமும், மூட முடப்பும் கொடுக்கிறது. ஆகவேதான் நம் நாட்டில் பண்டைத் தமிழகம் போல் காதலுக்கு இடந் தரவேண்டும். காதல் மணம் நடைபெற வழி வகுக்க வேண்டும்.

மனோகரன், இலட்சியம், வேற்று சாதியில் மணம் முடிக்கவேண்டும் என்பதானால், வரவேற்கிறேன். ஆனால் வேற்று சாதிப் பெண்ணோடு கொஞ்சநாள் பழகி, பண்பறிந்து மணம் முடித்துக் கொள்ளவேண்டும் என்றும் அவன் இலட்சியத்திற்குத் திருத்தம் கொண்டுவருகிறேன்.

நான் யோசித்தேன். அவர்களும், பக்கத்திலகிடந்த பழைய 'வாழ்க்கை'ப் பிரதிகளைப் புரட்டிப் படிக்க ஆரம்பித்தார்கள்—எனக்கு முடிவு ஏதும் தென்படவில்லை—அவர்கள் விடைபெற்றுச் சென்றனர்.

# மரகதம்

நிலா தங்கமான பெண்—பழகிய இரண்டொரு நாட்களிலேயே, அவள் எனக்குப் பிடித்தமானவளாகி விட்டாள். என் மனத்துயர்களை, சமயங்களில், வெளியிட ஒரு நல்ல இடம் கிடைத்தது.

மனிதமனம், எப்பொழுதும், தன் மனச்சுமைகளை இறக்கிவைக்க, சுமைதாங்கி தேடும் மகிழ்ச்சியானாலும், வருத்தமானாலும், அந்தத் தகவல்களை பிறர் செவிகளில் போட்டுவிட்டு, அவர்கள் 'பாவம், பரிதாபம்' என்று கூறினால் ஆறுதல்பெறும். மூட்டைகளைச் சுமந்து செல்லும் உழைப்பாளி, போகும் வழிகளில், பிறர் துணையின்றி இறக்கிவைக்கவும், ஏற்றிக்கொள்ளவும் தக்க மாதிரி, கருங்கற் தூண்களை நிறுத்தி, குறுக்கில் ஒரு கல்லைப்போட்டு, சுமைதாங்கி கட்டிவைத்திருப்பார்கள். உழைப்பாளி தன்தலைச் சுமையை அதில் இறக்கிவைப்பான். சிறிதுநேரம், வியர்வையைத் துடைத்துக்கொண்டு, களைப்பாறுவான். பிறகும் சுமையைத் தூக்கிக்கொண்டு, தன்வழியே நடப்பான். இந்த சுமைத் தூக்கிச்செல்லும் தொழிலாளிக்கும், மனித மனத்திற்கும் வேற்றுமையே கிடையாது.

என் மனச்சுமைகளை, இறக்கி வைக்கும், சுமைதாங்கியாகவே, நிலாவை நான் வைத்திருந்தேன்.

அந்தப்பெண் வெள்ளையுள்ளங் கொண்டவள் — இரக்க குணம் கொண்டவள்—வழியில்செல்லும் யாரேனும் அழுதால், தானும் அழுதுவிடுவாள். தொழிலாளி மூட்டையை இறக்கிவைக்கும் சுமைதாங்கிக்கு வாயுமிருந்து ஆறுதல்மொழி கூறினால், எவ்வளவு ஆனந்தப்படுவானோ, அதைவிட ஆயிரம் மடங்கு எனக்கு ஆனந்தம் ஏற்படும்.

பட்ட மரம்

மனிதர்மீதுதான் அவள் இரக்கம் கொண்டவள் என்று நினைக்கவேண்டாம். அவள் வீட்டில் ஒரு அறிவுள்ள நாய் இருக்கிறது. அதனை குழந்தை வளர்ப்பது போலவே வளர்த்து வந்தாள். வீட்டுப் பசுவிடமும், கன்றினிடமும் அவள் காட்டும் பரிவைப் பார்த்தால், நாம் ஏன் பசுவாகவும், கன்றாகவும் பிறக்கக்கூடாது என்று தோன்றும். அவளுக்கு குழந்தை பிறக்கவில்லை —பிறந்துவிட்டால், அந்தக் குழந்தையிடம் எப்படி பாசத்தைப் பொழிவாளோ—அறியேன்!

விலங்குகளிடம் காட்டும் அன்புதான் இப்படி— மரங்களிடத்து, அவள் எவ்வளவு கருணையைப் பொழிகிறாள் தெரியுமா? அவள் வீட்டுத் தோட்டத்தில் ஒரு நாரத்தை மரம் இருக்கிறது. அது ஏனோ வாட ஆரம்பித்தது. அவள் அதற்காக எவ்வளவு துடிதுடித்தாள் தெரியுமா? வருவோர், போவோரிடமெல்லாம் அதைப் பற்றியே விசாரித்தப்படியிருந்தாள்.

என்னை ஒருநாள் கூப்பிட்டுக் காண்பித்தாள்.

அது பட்டுவிட்டது என்று எனக்கு திட்டவட்டமாகத் தெரிந்துவிட்டது, இது இனி பிழைக்காது—பட்டது, பட்டதேதான் என்றேன். அவள் மனந்துடித்தாள்.

'மரம் பட்டுப்போனதிற்கு இப்படி வருந்துகிறாயே— மனிதரில் பட்டுப்போனவர், உண்டே, பார்த்ததில்லையா' என்றேன்.

அவள், 'நீங்கள் கூறுவது புரியவில்லையே' என்றாள்,

நான், 'உனக்குப் புரியாமலிருப்பதே நல்லது—பட்ட மரம், உன் தோட்டத்தில் மட்டுமில்லை. பக்கத்து வீட்டிலுமிருக்கிறது' என்று கூறினேன். என் கண்களில் நீர் கசிய ஆரம்பித்துவிட்டது. அதை மறைப்பதற்காக வீடுவந்து சேர்ந்தேன்.

* * *

# பட்ட மரம்

நால்வர் பள்ளியில் நான் ஆசிரியையாக அமர்ந்தேன்—எனக்கென்னமோ, மிக சங்கடமாகத்தானிருந்தது!

அந்தப் பள்ளித் தலைமையாசிரியை **தங்கம்மாள்** தங்கமான குணம்படைத்தவள்தான். மேல்நாடுகள் சென்று வந்த மேதை. அவள் மற்ற எல்லா ஆசிரியைகளோடு மிக அன்பாகப் பழகுவாள். என்னிடம் தனியான அன்பு. ஏனெனில் என்னுடைய பாட வகுப்புகளில் நான் திறமையாகச் சொல்லிக் கொடுப்பதைப் பார்த்திருக்கிருள். ஏன் திறமையாகச் சொல்லித்தரமாட்டேன்? வாழ்க்கையில் வேறென்ன வேலை, எனக்கு? பள்ளிப் பிள்ளைகளுக்கு, குடும்ப வாழ்க்கை எப்படி என்பதைப் போதிக்கிறேன். ஆனல், என் சொந்தக் குடும்பத்தை, பாழாக்கிக்கொண்டேன். பள்ளிப் பிள்ளைகளுக்கு எந்த நூலை எப்படிப் பின்னினல், பையாகும், துண்டாகும், மேசைக்குப் போடும் மேல் துணியாகும் என்று கற்பிக்கிறேன். ஆனல் என் வாழ்க்கைச் சம்பவங்களைப் பின்னி, எதிர்கால நல்வாழ்க்கையெனும் பையையோ, துண்டையோ செய்யமுடியவில்லை. குழந்தைச் சட்டை தைப்பது, பெண்கள் அங்கி தைப்பது போன்றவைகளைத் திறம்பட எடுத்துக் காட்டுகிறேன். ஆனல், என் வாழ்க்கைக்கு ஏற்ற வாழ்வுச்சட்டை தைக்கத்தெரியாமல் போய்விட்டேன்.

தங்கம்மாள் இன்னமும் 'மிஸ்' தான்—அவளுக்கு ஏறத்தாழ முப்பத்தைந்து வயதிருக்கும். அவர் வாழ்க்கையில் ஏதேனும் பெரும் புயலடித்து ஓய்ந்திருக்கவேண்டும் என்று அவளது உயிரில்லாத சிரிப்பு சொல்லும்.

அவள், என்னிடம் அலாதியான பிரியங் காட்டுவது மற்றவர்களுக்கு எரிச்சலைத் தரும். ஆனலும் மாலைநேரங்களில் என்னைத்தான் உலாவ அழைப்பாள். நானும் செல்வேன். அவள் வீட்டில் ஒரு சமையல்காரன். மிக வயதான கிழவன். அவன்தான் வீட்டு வேலைகளையெல்

லாம் கவனித்துக் கொள்வான். சமையற்கார கிழவன் **தாணுப்பிள்ளையை**, தன் சொந்த தந்தையைப் போலவே நடத்துவாள், தங்கம்மாள். என்னைக் கண்டதும், தாணு ஒரு கப் காபி கொடுத்துவிடுவான்.

நாங்கள் இருவரும், ஊரைத் தாண்டியுள்ள வயல் வெளிப்பக்கம் நடந்து செல்வோம்.

ஒருநாள், வயலில் நடவு நட்டுக் கொண்டிருந்தார்கள். தங்கம்மாள் என்னைப் பார்த்து பெருமூச்சு விட்டாள்.

'மரகதம், இதோ, நாற்று நடுகிறார்கள்—நன்றாக வளர்ந்து பலன் தரும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு—ஒரு தீய்க்காற்று அடித்தால், அத்தனையும் கருகிவிடும்' என்றாள்.

'கருகிவிட்டால் அந்தப் பயிரின் வாழ்வே பாழ்பட்டதாகவே அர்த்தம்' என்றேன்.

'பயிரைப் பற்றி பரிதாபப் படுகிறாய்—உலகில் எத்தனையோ மனிதப் பயிர்கள் கருகிக் கிடக்கின்றன' என்றாள். அவளின் நீண்ட பெருமூச்சு எனக்கு ஏதோ ஒரு உணர்ச்சியைத் தந்தது.

அவள் மேலும் பேசினாள்—என் காதுகள் கொதிக்க ஆரம்பித்தன. ஆம், அவ்வளவு கொதிப்பு இருந்தது, அவள் வார்த்தைகளில்.

'மரகதம், நான் கருகிய பயிர்தான்—என் வாழ்வே கருகித்தான் போய்விட்டது' என்றாள்.

எனக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. என் நிலையை எண்ணி நான் நொந்து கொண்டிருக்கிறேன். அப்போது தங்கம்மாள் தன்நிலை

குறித்து வருந்துகிருள். நான் ஆறுதல் தேடுகிறேன். அவள் என்னிடம் ஆறுதல் எதிர்பார்க்கிருள். சிவன் ராத்திரி வீட்டிற்கு, ஏகாதசி விருந்துக்கு போன கதை போலல்லவா இருக்கிறது.

'நீயோ கருகிய பயிர்—நானே பட்டமரம், என்று கூறிவிடலாமா என்றுகூட என் மனதில் பட்டது. ஆனு லும் மனதை அடக்கிக்கொண்டேன்!

தங்கம்மாள் துயரத்தை அறிந்ததன் மூலம், உலகத் தில் நான் மட்டும் தனியாக இல்லை, எனக்குத் துணை உண்டென்பதைத் தெரிந்துகொள்ள முடியும் என்று கரு தினேன்.

'மரகதம்' என் முகத்தில் என்றைக்காவது தெளி வைக் கண்டதுண்டா? என் முகம் இருளடைந்துதான் இருக்கும் என் வாழ்வில் இருள் புகுந்துவிட்ட பிறகு முகத்தில் எப்படி இருள் புகாமலிருக்கமுடியும்? அடுத் தது காட்டும் பளிங்குபோன்றது முகம் — மனத்திலுள் ளதை அப்படியே எடுத்துக்காட்டிவிடும் — அகத்திலுள் ளதை, முகத்தில் பார்க்கலாம் என்பார்களே அதன்படி என் முகம் அமைந்துவிட்டது' என்ருள் தங்கம்மாள்.

'ஏனம்மா, தங்களின் அமைதியான முகத்தில் அறி வொளி வீசுகிறதே!' என்றேன் நான்.

'என் முகத்தில் அமைதி — என் அகத்திலோ புயல் —என் முகத்தில் அறிவொளி — ஆனல் அகவாழ்க்கை யின் திருப்தியொளி தெரியவே தெரியாது' என்ருள் அவள்.

'ஏன் இப்படி வேதனையோடு பேசுகிறீர்கள்?' என் றேன்.

'பந்துக்குள் அடைக்கப்படும் காற்று, சிறு சந்து கிடைத்தாலும் வெளியில் வேகமாக வந்துவிடுகிறதல்

லவா? அதுபோல, வந்துவிட்டது என் மனதில் அடைக்கப்பட்டுள்ள வேதனை—தவருக நினைத்துக்கொள்ளாதே—உன்னை என் உடன்பிறந்த தங்கையாக எண்ணிக் கொண்டு சொல்கிறேன்—எண்ணுவதென்ன, உன்னைப் போலவே தோற்றமும், பேச்சும், குணமும் கொண்ட ஒரு தங்கை எனக்கு இருக்கிருள்—அவள் பெயர் தாரா. அவள் இப்போது, தூத்துக்குடியில் நர்ஸாக இருக்கிருள்—அவள் தோற்றம் போலவே இருப்பதால்தான் உன்னிடம் எனக்கு அதிக பாசம் — அதனுலேதான் உன்னை நான் அடிக்கடி வீட்டுக்கு அழைப்பதும், வேடிக்கையாகப் பேசுவதுமாக இருக்கிறேன். மரகதம், என் மனச் சுமையைத் தாங்க முடியாமல், என் மனம் வளைந்து விட்டது. உன்னிடம் சொல்வது மூலமாவது என் சுமை குறையும் என்று எண்ணுகிறேன்' என்ருள் அவள்.

எனக்குச் சிரிப்பதா, அழுவதா என்றுத்தெரியவில்லை. எங்களூரிலிருந்து, நான்கு மைல் தொலைவிலுள்ள எண்ணனூர் என்பது வளமான சிற்றூர். நகரத்திலிருந்து, தலைசுமையாக சாமான்களை வாங்கி எடுத்துச் செல்வது, அச்சிற்றூர் மக்களின் பழக்கம். ஊர்போய்ச் சேர்வதற்குள், இரண்டு சுமைதாங்கிகள் உண்டு அங்கங்கே இறக்கிவைத்து, பிறகு தூக்கிக்கொண்டு செல்வர். அப்படிச் சுமை தூக்கிச்செல்வோர் ஒருவருக்கொருவர், சுமையைத் தூக்கவும், இறக்கவும் உதவிசெய்வர். அந்தக் காட்சிதான் என் கண்முன் வந்தது.

தங்கம்மாள், தன் வாழ்க்கைக் கதை முழுவதையும் கூறட்டும் என்று, நான் கேட்கத் தயாரானேன்.

தங்கம்மாள், அப்படி யொன்றும், நீண்ட கதை சொல்லவில்லை—ஆனுல், அந்த சுருக்கத்தைச் சொல்லி பல நீண்ட பெருமூச்சுகளை விட்டுவிட்டாள். அவள் நீண்ட முன்னுரை பேசிருளே தவிர, குறுகிய முடிவுரை தான் கூறினுள்.

'மரகதம், நான் கருகிய பயிர்—மொட்டாக இருக்கும்பொழுதே, வாடிப்போன மலர்—ஆமடியம்மா, என் வாழ்வைச் சோலையாக்குவதாகக் கூறி, பாலையாக்கிவிட்டான் ஒரு பாவி—அந்தப்பாவி வாழும் ஊரும் இது தான்—அதனால் பழையநினைவுகள் படையெடுக்கின்றன, என் நெஞ்சத்திலே புயல் வீச ஆரம்பித்து விடுகிறது—சரி—சரி—இருட்டிவிட்டது—போவோம்' என்று கூறிக்கொண்டு, திரும்பிவிட்டாள் தங்கம்மாள். திரும்பி வரும்பொழுது அவள் ஏதும் பேசவில்லை—நான் என்ன பேசுவது என்று புரியாமலே, மௌனமாகவே வந்தேன், அதற்குள், தங்கம்மாள் வீடும் வந்துவிட்டது. அவளை விட்டுவிட்டு, தனியே என் வீடு நோக்கி வந்தேன்.

*    *    *

அலமேலு கிழவி வழியிலேயே உட்கார்ந்திருந்தாள்.

'ஏம்மா, இந்நேரம் வரையிலும் என்ன செய்தே?' என்றாள்.

'தங்கம்மாளோடு போயிருந்தேன்' என்று கூறிக்கொண்டே உள்ளே சென்றேன்.

அலமேலு, உடனே, இலையைப் போட்டு, எனக்கு சாப்பாடு போட்டாள். சாப்பிட்டுக்கொண்டே யோசித்தேன். எனக்கு ஏன், இப்படி, மனம் நிம்மதியின்றி அலைமோதுகின்றது என்று புரியவில்லை. எனக்குயாரிடமாவது, பேசி, சிறிதுநேரம் அழுதுவிடவேண்டும் போலிருந்தது. அலமேலு நான் இலையில் உட்கார்ந்தபடி, எதைப்பற்றியோ யோசிப்பதைப் பார்த்துவிட்டு, அன்போடு கடிந்து கொண்டாள். நான் மெதுவாக சாப்பாட்டை முடித்துக் கொண்டு எழுந்தேன்.

அறையினுள் சென்று ஏதேனும் புத்தகத்தைப் படித்துப் பொழுதைக் கழிக்கலாம் என்று பார்த்தேன். எந்த

ஏட்டைப் பார்த்தாலும் எனக்கு, பக்கத்து வீட்டுப் பட்டுப்போன நாரத்தை மரமே நினைவிற்கு வந்தது.

வெளியில் வந்து படுக்கையில் படுத்தபடி, கிழவியோடு பேச்சு கொடுத்தேன். ஐயோ, அவளும் தன் துயரக் கதைகளை ஆரம்பித்துவிட்டாள். அவள், வயதுக்கு வருவதற்கு முன்பே, கட்டிக்கொடுக்கப்பட்டு, கணவன் யாரென்று தெரியாமலே, காலம் முழுவதும் வீட்டுவேலை செய்து பிழைத்துவருகிறுளாம், என் காதுகளைப் பொத்திக்கொண்டேன். ஏனெனில், ஏதேனும் மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சி, என் காதில் விழுமென்று பார்த்தால், ஒன்று கூட, அன்று கேட்கவே முடியவில்லை.

மீண்டும் படுக்கையைவிட்டு எழுந்தேன். புத்தக அறைக்குச் சென்றேன். மேஜையின்மீது அந்த வார 'வாழ்க்கை' பத்திரிகை கிடந்தது. புரட்டினேன், 'மரம் சொன்ன கதை' என்று ஒரு உருவகக் கட்டுரையிருந்தது, படித்ததும், என்னையறியாமலே, ஒரு தாளில் எழுதினேன். அது ஒரு கட்டுரையாகப் போய்விட்டது.

அதனைத் திருப்பித்திருப்பி இரண்டுமுறை படித்தேன். அதற்கு ஒரு தலைப்பும் தந்தேன் 'மரம் சொல்ல மறந்த கதை' என்று தலைப்பிட்டு, அதனை மூன்றுவது முறையாகப் படித்து முடித்தேன். அதனைப் படித்த பிறகுதான் என் மனம் சிறிது நிம்மதியடைந்தது.

அடுத்த வீட்டு புத்தர்தான் 'வாழ்க்கை' பத்திரிகையின் ஆசிரியர்—நிர்வாகப் பொறுப்பு முழுவதும் ஏற்றுள்ளவர் அவர் மூலம், இதனை அந்த பத்திரிகையில் வெளியிடச் செய்யவேண்டும் என்று முடிவு செய்தேன். இந்த எண்ணம் உதித்தபிறகு, இன்னும் அதிகமாக அமைதி மனதில் நிலவ ஆரம்பித்துவிட்டது.

திரும்பவந்து படுக்கையில் படுத்துவிட்டேன்—தூங்கியும் விட்டேன்.

* * *

பத்திரிகை பெயர் 'வாழ்க்கை'. ஆனால், அதுதான் என் வாழ்க்கையை பட்டமரமாக்கிவிட்டது என்பது யாருக்குத்தெரியும்? அதனால்தான், அந்த 'வாழ்க்கை'யில் எனது கட்டுரையும் வரவேண்டும் என்று விரும்பினேன்.

ஆகவே, மறுநாள் காலையில், பக்கத்து வீட்டுக்குப் போனேன். நிலா வரவேற்றாள்

'நிலா எனக்கு நீ ஒரு சிபார்சு செய்ய வேண்டும்' என்று சிரித்தேன்.

'சிபார்சா—எந்த வேலைக்கு—யாரிடம்?' என்றாள் அவளும் பதிலுக்கு.

நான், கட்டுரையை அவளிடம் தந்து இதனைஅவள் கணவனிடம் கொடுத்து, 'வாழ்க்கை' பத்திரிகையில் வெளியிடச் சொல்லும்படிக் கேட்டேன்.

அவளும் 'ஆகட்டும்' என்றாள். நான் பிறகு பள்ளிக்குச் சென்றுவிட்டேன்.

போகும் வழியில் எண்ணச்சுழல்களிடையே என் மனம் சிக்கிச்சுழன்றபடியிருந்தது. 'வாழ்க்கை' என்பது பல வர்ணங்கள் தெரியும் வானவில் போன்றது என்பது என் அந்தநாள் கற்பனை. அதுமட்டுமல்ல இந்த வானவில்லின் உண்மை தத்துவத்தோடு உணர்ந்திருந்தால் இன்று இப்படி அலைமோதமாட்டேன். வாழ்க்கையென்ற வானவில் பலநிறங்களை என்றும், எப்பொழுதும் நிரந்தரமாகக் காட்டி மகிழ்விக்கும் என்று தவறுதலாகக் கருதிவிட்டேன். அது தோன்றி மறையும் தன்மைவாய்ந்தது என்று புரியவில்லை — அப்படியுணர்ந்திருந்தால், இன்று 'வாழ்க்கை' ஏட்டிற்குக் கட்டுரை தரும் நிலையிலா இருப்பேன். — 'வாழ்க்கை' ஏட்டில்............என்னவெல்லாமோவாக இருந்திருப்பேன். இப்படி எண்ணினேன்.

அந்த எண்ணத்தைத் துரத்திக் கொண்டு வேருெரு எண்ணம் ஓடி வந்தது. வாழ்க்கை ஒரு விசித்திரமான பொங்கல். அதனை தயாரிக்கும் முறையோ, அதைவிட விந்தை நிறைந்தது. சுயநலம் என்ற அடுப்பில், பொய் யெனும் விறகிட்டு, சூது எனும் தீயை மூட்டி, போலித் தனம் எனும் பானையில், ஏமாற்றுத்தனம் எனும் அரிசி கொட்டி, நயவஞ்சக சிரிப்பெனும் பால் பெய்து, நரிப் பேச்சு எனும் சர்க்கரை கொட்டி, மோச முந்திரியிட்டு, திருட்டு திராட்சை போட்டு, கொடுமை குங்குமப்பூ போட்டு, வெள்ளிப்பணம் எனும் நெய்யிட்டு இறக்கி வைக்கவேண்டும் இந்தப் பொங்கல்தான் இன்றைய உலகில் வாழ்க்கையென்று பேசப்படுகிறது. இந்த நினைவு தான் முன் நினைவை முறியடித்தது.

இப்படி எண்ண மண்டலங்களில் தட்டுத்தடுமாறிக் கொண்டே நால்வர் பள்ளி வாயிலை அடைந்துவிட்டேன்.

* * *

புத்தரை, நான் நேரில் சந்திக்க விரும்பினுலும், அவ் வளவு விரைவில் அந்த சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. ஆனுல், அவர் வீட்டிலேயே நான் அவரைக் கண்டு பேசும் வாய்ப்பு கிடைத்தது.

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பார் கள். இந்த பழைய மொழிப்படி, உலகத்தை அளந்து விடும் மனுேபாவம் கொண்டவர்கள், உலகில் அதுவும் தமிழ்நாட்டில் அதிகம் இருந்திருக்கவேண்டும். அதனுல்; பெண்குலத்தை இழித்துப் பேசுவதையே தொழிலாகக் கொண்டிருந்திருக்கிருர்கள், வேறு சிலர் ஆண் வர்க்கத் தையே வஞ்சகம் நிறைந்திருந்தது என்று வசைமாரி பொ ழிந்து வந்திருக்கிருர்கள். வாழ்க்கை விஷயத்தில் இந்தப் பழமொழி முற்றிலும் தவருனது. இதில், ஒவ்வொரு சோற்றையும் தனித்தனியே பதம்பார்த்துத்தான் முடிவு கூறவேண்டும்.

அப்படிப்பார்த்தால், ஆண்வர்க்கத்தையே வெறுக்க வேண்டிய நான், புத்தரோடு பேசிய சிறிது நேரத்திற்குள், அவரைப் பிரித்துப் பேசவேண்டிய நிலை ஏற்பட்டிருக்காது. அதுபோலவே, என்னை ஏமாற்றிக்கொள்ளத்தான் வேண்டும்.

ஒரு சோற்றைக்கொண்டு, பதம் பார்ப்பதென்ருல், விபரீத முடிவுகள் ஏற்படும். வாழ்க்கையே, தீபாவளி திருவிழாவில் குழந்தைகள் படாபடா வெடிப்பது போலத் தானிருக்கும்.

புத்தரிடம் பேசியதிலிருந்து, அந்தப் புற்றுப்பாம்பின்—ஆம், அந்த மகானுபாவரை அப்படித்தான் அழைக்க வேண்டும்—இன்றைய மனநிலை என்ன என்பதையறிந்து கொண்டேன். அந்த நினைவு வந்தவுடன், என் கண்கள் என்னைக் காட்டிக்கொடுத்துவிட துடித்தன. அதற்குள், என் கண்ணீரைத் துடைத்து மறைத்துவிட்டேன். நல்ல வேளையாக அப்போது அலமேலு வந்து காப்பாற்றினுள். இல்லாவிட்டால், அவரிடம் நான் என் கதை முழுவதும் கூறவேண்டிய கட்டம் வந்திருக்கும். யாரோ கூப்பிடுகிருர்கள் என்றவுடன், நான் எழுந்து போய்விட்டேன். வந்திருந்தவர்களாலே என் வாழ்விலே மற்ருெரு புயலடித்துவிட்டது. பட்டுப்போன மரத்தை, வெட்டி வீழ்த்தி விட்டதுபோலாகிவிட்டது என்று கூறினுலும் தவறில்லை.

*   *   *

அங்கு வந்திருப்பவரில் ஒருவர் நண்பர் சாரங்கன் என்பதைக் கண்டதும் நான் மகிழ்ச்சியடைந்தேன்.

நான் கல்லூரி நாட்களில், யாரேனும் ஆண்களோடு அதிகம் பேசியிருக்கிறேன் என்ருல் அது இருவரோடு தான்—ஒருவர் சாரங்கன் — மற்ருெருவர்...... சொல்ல மனங் கூசுகிறது.

## பட்ட மரம்

சாரங்கன், என்கூட பிறக்கவில்லையே தவிர, சகோதரன் மாதிரியே. நான் அவரைப்பற்றிக் கூறும்பொழுதெல்லாம், சாரங்கண்ணு என்றுதான் குறிப்பிடுவேன். அவரோடு ஒரு வாலிபரும் இருந்தார். அவரை யாரென்று நான் விளங்கிக்கொள்ள முடியவில்லை. சாரங்கண்ணு, வழக்கம்போலவே, வேடிக்கையாகப் பேச ஆரம்பித்து விட்டார்.

'ஏம்மா, மரகதம் — சாரங்கண்ணனை மறந்துவிட்டாய் போலிருக்கிறது'

'இல்லையண்ணு, எனக்கு வேலை கிடைக்காமல் முதலில் தொல்லை. இப்போது வேலை கிடைத்திருக்கிற இடத்தாலே தொல்லை'

'உனக்கு என்றும் உதவி செய்யக் காத்திருக்கும் ஒரு அண்ணன் இருக்கிறன் என்பதை மட்டும் மறந்துவிடாதே -- நீ மறந்தாலும், நான் மறக்கவில்லை யென்பதைக் காட்டவே, உன்னிருப்பிடம் தேடி வந்திருக்கிறேன்'

'நன்றி அண்ணு, வாருங்கள், உள்ளே வாருங்கள்'

வாசலில் பிரம்பு நாற்காலியை இழுத்துப்போட்டு, அவர்கள் இருவரையும் உட்காரவைத்துவிட்டு உள்ளே சென்றேன். அதற்குள் அலமேலு காப்பி தயாரிக்க ஆரம்பித்துவிட்டாள். அதனை முடித்து எடுத்துக்கொண்டு வந்து தந்துவிட்டு, நானும் ஒரு நாற்காலியில் அமர்ந்தேன்

'இவர் யாரென்று கூறவில்லையே?'

'இவருக்காகத்தான் இந்தப் பயணமே — மரகதம், இவர் உன் சாதி'

'என்னணு நீங்கள்கூட சாதிமுறை பேச ஆரம்பித்து விட்டீர்கள்'

'சாதியென்ருல், வாத்தியார் சாதி — பெயர் மனேகரன்'

'ஓ, தொழிலேச் சொல்கிறீர்களா — சரி, இப்போது எங்கேயிருக்கிறீர்கள்?'

'இங்கேதான்!'

நான், இப்போது மனேகரனிடம் நேரடியாகப் பேச ஆரம்பித்துவிட்டேன்.

'தாங்கள் இப்போது எங்கே வேலேபார்க்கிறீர்கள்?'

'இங்கேதான் வேலே பார்க்கலாமென்று........'

'ஓ, அப்படியா — இன்று அது சம்பந்தமாகத்தான் வந்திருக்கிறீர்களா?'

'அதுமட்டுமில்லே—இன்னும் ஒரு முக்கிய விஷயமும் உண்டு'

'என்ன அது?'

'மனேகரன் தனியாக இருப்பதை என்ஞல் சகிக்க முடியவில்லே. அவனுக்கு ஒரு துணேயும் தேடிவைத்து விடுவது என்றுதான் புறப்பட்டு வந்தேன்'

'மகிழ்ச்சிகரமான சேதி!'

இப்போது மனேகரனே, நான் பார்த்தேன். அவர் வேறு எங்கேயோ தன் கவனத்தைத் திருப்ப முயற்சி செய்துகொண்டிருந்தார்.

* * *

சாரங்கண்ணன் எனக்குத் தெரிந்தவகையில், மணப் பெண் கிடைக்குமா என விசாரித்தார்.

அவர்கள் வந்து ஐந்தாறு தினங்கள் ஆகிவிட்டன. ஆகவே, சாரங்கண்ணனேடு பழகுவதுபோலவே, மனே கரனேடும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது.

'வேலையில்லாத மாப்பிள்ளையை, எந்த **வீணி** கட்டிக் கொள்வாள்?' என்று கிண்டலாகக் கூறினேன். அது, அவருக்கு மிகவும் மன வருத்தத்தை தந்துவிட்டது என் பதை பின்னலே தெரிந்துகொண்டேன்.

மனேகரன் முகத்திலிருந்த சிரிப்பும், களிப்பும் மறைந்துவிட்டன. அவர் சாரங்கண்ணனேடு என்ன பேசினரோ, தெரியாது. அவர், மறுநாள், என்னிடம் வந்தார்.

'மரகதம் நான் இன்று ஊருக்குப் புறப்படுகிறேன். மனேகரன்-இந்த விசித்திர சித்தர்-பள்ளியில் வேலைக்கு முயற்சி செய்துகொண்டிருக்கிருன். அந்த பதில் இரண் டொரு தினங்களில் கிடைத்துவிடும். அதுவரையில், இங்கு தங்கியிருப்பான்'

'அப்படியானல், அவர் மண விஷயம்'

'வேலை கிடைத்த பிறகுதான்'

'ஐயோ, நான் வேடிக்கையாகச் சொன்னதை, விப ரீதமாக அவர் அர்த்தம் செய்துகொண்டாரா?'

'இல்லை, மரகதம் — அது முற்றிலும் உண்மையே! அவன் கூட என்னிடம் அப்படித்தான் கூறினன். என் பிடிவாதந்தான் மண ஏற்பாடு — நான் அடுத்த மாதத் தில் வந்து பார்க்கிறேன்'

சாரங்கண்ணன் விடைபெற்றுச் சென்றுவிட்டார். மனேகரனும், அவரை வழியனுப்ப, உடன் சென்று விட்டார்.

* * *

என் மனம், இப்போது நிலையில்லா கடல்போல, அலையிரைச்சலோடு, எப்போதும் அமைதியிழந்து கிடந்தது.

மனேகரனேடு, தனிமையில் அந்த வீட்டிலிருக்க என்னுல் முடியவில்லை.

என் மனம் பயங்கரக் கூத்தாடிக் கொண்டிருந்தது. அவர் மனம் எப்படியோ?

என் பெற்ருேர்களோடு நான் வசித்து வந்த நாட்களில் ஒரு தீ விபத்து நடந்தது. அதாவது தீப்பெட்டி கம்பெனியொன்று எங்கள் வீதியில் இருந்தது. அதன் பக்கத்திலே ஒரு கிடங்கு இருந்தது. அக்கிடங்கில் பஞ்சு மூட்டைகள் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. இந்த இரண்டிற்கும் பக்கத்தில் ஒரு டீ கடை வந்தது ஒரு நாள் திடீரென டீ கடையில் தீ பிடித்தது. அவ்வளவுதான். தீப்பெட்டிக் கம்பெனியும், பஞ்சு மூட்டைக் கிடங்கும் கொஞ்ச நேரத்தில் எரிந்து சாம்பலாகிவிட்டன. தீயணைக்கும் படையினர் வந்தும் ஒன்றும் நடைபெற வில்லை. அந்த நினைவுதான் இப்போது வந்தது. நானும், மனேகரனும் சேர்ந்திருப்பது, பஞ்சுமூட்டை கிடங்கும், தீப்பெட்டிக் கம்பெனியும் பக்கத்து பக்கத்திலிருப்ப தாகவே எனக்குப்பட்டது டீ கடை வந்ததுபோல், ஏதேனும் விபத்தான சம்பவம் ஏற்பட்டால், விபரீத மான விளைவுகள் தான் ஏற்படும்.

அவர் வேலைக்கு முயற்சி செய்து கொண்டிருந்தது, வெற்றியை அளித்துவிட்டது. அவருக்கு ஆசிரியர் வேலையும் கிடைத்துவிட்டது.

நான், அவரை, என் வீட்டில் தங்கியிருக்கும்படிக் கேட்டுக்கொண்டேன். அவரும் ஒப்புக்கொண்டார். அப்படி அவர் என் வீட்டிலே தங்கியபிறகுதான் என் மனம் அமைதியின்றி அலேமோதிற்று.

தீ விபத்து கூறினேனே, அதைவிட பயங்கரமான நிலேதான் எனக்கு — ஏனெனில், அந்த வாலிபரிடம் நான் அடிக்கடிப் பேசும் பிரச்சினே என்ன தெரியுமா? திருமணம். ஏனெனில், அவர் திருமண ஏற்பாடுபற்றி சாரங்கண்ணு என்னிடம் கூறிச்சென்ருர். அதனுல்தான் அவரிடம் அதுபற்றிப் பேசினேன்.

அப்படிப் பேசும்பொழுது, என் மனதில் ஏதோ, 'திக், திக்' என்று பயவுணர்ச்சி ஏற்பட்டது. அதற்கு காரணம் என்னவென்று என்னுல் கூறமுடியவில்லே.

இந்த நிலேமை, எந்த பயங்கர முடிவிற்குக் கொண்டு விடுமோ என்று பயந்துகொண்டிருந்தேன். திருமணப் பேச்சு என்று ஆரம்பிக்கும்பொழுது, அந்த டீ கடை, தீ, கூரையில் பிடிப்பதுபோலவே உணர்ந்தேன். அடிக்கடி, தீ உண்டாயிற்று. திடீர் விபத்தொன்றும் ஏற்படவில்லே.

* * *

மனேஹரனின் எல்லா வேலேகளேயும் நானே செய்வேன். அவர் அழுக்குத் துணிகளே, வெளுக்கப்போட்டுக் கணக்கு வைத்துக் கொள்வதிலிருந்து, அவர் சம்பளத்தை வாங்கி, பெட்டியில் வைப்பதுவரை எல்லா வேலே களேயும் செய்தேன். அப்படிச் செய்யும்பொழுது என் மனதிலே மகிழ்ச்சி வந்தாலும், முகத்திலே பீதிதானிருக்கும்.

நான் 'வாழ்க்கை' ஏட்டை அன்று படித்துக்கொண்டிருந்தேன். அப்பொழுது அவர் வந்தார். அவர் அருகிலிருக்கும்பொழுது எனக்கு நிம்மதியிருந்தது. அவர் இல்லேயென்ருல், என் மனம் பல திகில்தரும் எண்ணங்

களால் தாக்கப்பட்டு பயங்கர அழிவுகளை உண்டாக்கிக் கொண்டேயிருக்கும். இதற்காகத்தான், அவர் இல்லாத பொழுது ஏடுகளின் துணையைத்தான் நாடியது, என் மனம்.

அவரிடம் மிகவும் சரளமாக பழகினாலும், என்னைப் பற்றி, என் நிலையைப்பற்றி மட்டும் அவரிடம் கூற என் மனம் இடந்தரவில்லை. அவரும் என்னைப்பற்றி கேட்கவே இல்லை. எனக்கு அதுதான் ஆத்திரமாக இருந்தது.

அன்று அவரிடம், அதைக் கேட்டுவிடுவது என்று தானிருந்தேன். அவரும் வந்துவிட்டார்.

'சாப்பிட வாருங்கள்'

'நீங்கள் சாப்பிட்டுவிட்டீர்களா?'

'நான் எப்படி சாப்பிடமுடியும்?'

'ஏன்?'

'நீங்கள் இல்லாமலா!'

அவருக்கு என்ன பதில் கூறுவதென்றே புரியவில்லை போலும். ஆகவே ஏதோ பதில்கூறமுயன்றும், வார்த்தைகள் வெளியில் வரவே இல்லை.

'சரி, சாப்பிடலாம்' என்றார். அவர் கூறியவுடன் இருவரும் உட்கார்ந்து சாப்பிடும் மாதிரியில் எல்லாவற்றையும் அருகில் எடுத்துக்கொண்டு வந்து வைத்துவிட்டு, இரண்டு இலையைப்போட்டு பரிமாறினேன்.

சாப்பிட உட்கார்ந்தவுடன், என் நினைவு எங்கோ ஓடிவிட்டது. பழையநினைவுகள் படையெடுத்துவிட்டன, என் கண்களில் நீர் கசிய ஆரம்பித்துவிட்டது.

## பட்ட மரம்

இலையில் இரண்டு சொட்டு கண்ணீர் விழுந்து விட்டது. இதைக்கண்ட அவர், அப்படியே மலைத்து உட்கார்ந்துவிட்டார்,

'ஏன் அழுகிறீர்கள்?' என்றார். நான் பதில் சொல்லவில்லை. அவர் மீண்டும் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டார். நான் இனியும் பேசாமலிருக்க முடியவில்லை. விக்கலுக்கிடையே, நான் 'இத்தனை நாட்களுக்குப் பிறகாவது இந்தக் கேள்வியைக் கேட்டீர்களே!' என்றேன்.

அவர் திருதிருவென விழித்தாரே ஒழிய வேறெதுவும் சொல்லவில்லை.

நானே, மேலும் பேசினேன். விடாது தொடர்ந்து வெகுநேரம் பேசினேன்.

'மாதங்கள் எட்டு உருண்டோடிவிட்டன. இன்னமும் தாங்கள் என்னைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்பவில்லையே என்ற எண்ணம்தான் என்னை வாட்டி வதக்கிக்கொண்டிருந்தது. ஐயோ, நான் பட்டுப்போன மரம் --துளிர்க்கவே முடியாத மரம்.'

'பட்ட மரமா?'

'ஏன் ஆச்சரியப் படுகிறீர்கள்—பூவும், பிஞ்சுமாக செழிப்போடு இருக்கவேண்டிய மரத்தின் வேருக்கு வெந்நீராக வந்து வாய்த்தான் ஒரு பாவி — அந்தப்பாவி உலவும் ஊரிலேயேதான் நானும் இருக்கிறேன். அவனுக்கு பட்டம், பதவி, பெருமை, புகழ் எல்லாம் - என்னைப்பற்றி எவர் எண்ணுகின்றனர்'

'யார்?'

'அதைத் தெரிந்து தண்டனை தரவேண்டிய பொறுப்பு உங்களுடையது'

'பெயரைக் கூறுங்கள்'

'அந்த துன்மார்க்கனின் பெயரைக்கூட நான் கூற விரும்பவில்லை'

இதன் பிறகு, சாப்பாட்டை ஒப்புக்குச் சாப்பிட்டு முடித்தார்—நானும் அப்படியே!—

அவர் வருவதற்கு முன்னல் 'வாழ்க்கை' பத்திரிகையில் நான் படித்துக்கொண்டிருந்த கதையின் கருத்து தான் என் மனதில் உடன் வந்து தங்கியது. தேனைப் பறிகொடுத்த மலர் ஒன்று, தேனில்லாதபோது வந்த வண்டொன்றினிடம் தன் துயரக் கதையைக் கூறி, தேனை மொண்டு சென்ற வண்டினைக்கண்டு நல்ல பாடம் தர வேண்டுகிறது. அந்தக் கருத்தேதான் என் மனதில் குடிகொண்டுவிட்டது.

* * *

மனோகரன் வந்து நாற்காலியில் அமர்ந்தார். நான் எதிரில் கிடந்த மேசையில் ஏதோ தேடிக்கொண்டிருந்தேன். அப்போது அலமேலு கிழவி, முருங்கக்காய் நறுக்கிக்கொண்டிருந்தாள்.

'முருங்கை வீட்டிற்கொன்று இருப்பது நல்லது'

'ஆனல் அது கம்பளிப் பூச்சிகளை அடிக்கடி அனுப்பி வைக்கும் ஆபத்து மரமாக இருக்கக்கூடாது'

'முருங்கை மூன்று வகைப்படும்—கல்யாண முருங்கை, கறி முருங்கை, காட்டு முருங்கை எனக் கூறப்படும்'

'மரத்திற்கும், மங்கையருக்கும் எத்தனையோ ஒற்றுமைகள் உண்டு'

'முருங்கை பற்றிச் சொன்னல் மங்கையர்பற்றிக் கூறுகிறீர்கள் — மங்கையரை மரத்தோடு ஒப்பிடுவதற்

காக, மங்கையர் சார்பில் மானநட்ட வழக்கு போட வேண்டியதுதான்'

எல்லா ஆண்களும் உங்களைப்போலவே இருந்து விட்டால், மங்கையர் மரமாக வேண்டியதில்லை — முருங்கையில் மூன்று பிரிவு இருப்பதுபோலவே, மங்கையரிலும் மூன்று ரகத்தவரைப் பார்க்கலாம். கருகிய மொட்டு, பட்டமரம், மக்கிப்போன மரம் எனப் பார்க்கலாம்'

முருங்கையின் இலை, ஈர்க்கு, பூ, பிஞ்சு, காய், பட்டை, பிசின், வித்து, வேர் இவை அத்தனையும் பயன் படக்கூடியவை'

'மங்கையரின் பயனும் அப்படியேதான்'

முருங்கக்கீரை வாயுத் தொல்லையை நீக்கும்'

'மங்கையரின் மலர்ந்த முகம், குடும்பத்தின் குமுறலை விரட்டும்'

'இலைக்காம்பு, காய்ச்சலை நீக்கும்'

'பெண்களின் கனிமொழி கவலைகளை நீக்கும்'

'முருங்கப்பூவைச் சாப்பிட்டால், கண்களில் குளிர்ச்சி சேரும்'

'மங்கையரின் சகவாசம், மனமகிழ்ச்சியைச் சேர்க்கும்'

'முருங்கக்காய் சாப்பிட்டால், எல்லா நோய்களுக்குமே விலக்களிக்கும்'

'வட்டிற்கு ஒருத்திவந்துவிட்டால், வேதனை தீரும், தனிமை ஓடும்

'முருங்கை விதை, மனித இனத்திற்கே வழிவகுக்கும்'

'மங்கையர் குலத்தின் இலட்சியமே அதுதான்'

'முருங்கை மரப்பட்டை வாததோஷத்தையும், வேறு சில விஷத்தையும் முறிக்கும்'

'ஆடவரின் கோபம், அவசரம் போன்ற விஷயங்களை முறிக்கும் மருந்துதான் பெண்'

'வேர்ப்பட்டை, கபதோஷத்தைப் போக்கும்'

'மங்கையரின் நிர்வாகம், குடும்பச் சிக்கனத்தை நிலை நாட்டும்'

'முருங்கைப் பிசின் இல்லறத்தின் 'உயிர்நாடி'க்கே உயிரூட்டும்'

'பெண்ணின் அன்பும், அதையேதான் செய்யும்'

'இதனுல்தான், சொல்லும் பிணியெல்லாம், தோல் வியாம் ஐயமறும், பல்லுயிர்க்கும் தாதுமிகும் பத்திய மாம் — வில்லார் பெருங்கைக்கா மன்துதிக்கும் பெண் ணே நறிய, முருங்கைக்காய் தன்னை மொழி' என்று பதார்த்தகுண சிந்தாமணிப் பாட்டு கூறுகிறது?

'இல்லாள் அகத்திருக்க இல்லாததொன்றில்லை யென்று இதே கருத்தை, ஒரே அடியில் கூறியிருக்கிறது'

'முருங்கையை வீட்டிற்கருகில் நாட்டி வளத்தலா காது, வளர்த்தால் வேதாளம் குடிபுகும் என்பர். வேதா ளம், விக்கிரமாதித்யன் காலத்தோடு சரி — இப்போது கம்பளிப் பூச்சிகள்தான் — ஆனல் அதனையும் பினைல் ஊற்றி உண்டாகாமல் தடுத்துவிடமுடியும்'

'ஆம், இல்லறத்தில் ஏற்படும் சிக்கல்களை காரண மாகக் காட்டி, கம்பளியை வேதாளம் என்று கூறு

வதைப்போல, பெரிதுபடுத்தி, துறவறம் சிறந்தது என்று பேசுவோர் இருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கையின் சுவையும், பயனும் உணராதவர்கள்!'

இப்படி, லாவணிபாடும்பாணியில், அவர் மரத்தைப் பற்றிக் கூறும் ஒவ்வொரு வாசகத்திற்கும், நான் மங்கையரோடு ஒப்பிட்டு ஒப்புவமை கூறிவந்தேன். இதைக் கேட்டுக்கொண்டேயிருந்த அலமேலு, 'இன்று குழம்பு அடிபிடித்துத்தான் போகப்போகிறது' என்றாள்.

*　　　*　　　*

மனோகரன் என் வீட்டிற்கு வந்தபிறகு, நான் பள்ளி வேலையைத்தவிர வேறொரு வேலையையும் கவனிக்க வெளியில் செல்வதில்லை. தங்கம்மாள்கூட, என்னை மாலை நேரத்தில் கூப்பிட்டுப் பார்த்து, பார்த்து, போகாததால், இப்பொழுதெல்லாம் கூப்பிடுவதில்லை.

தங்கம்மாளின் தங்கை தாரா வந்திருக்கிறாள் என்று கூறி, என்னை வரும்படி அழைத்தாள், ஒருநாள்.

என் மனதில் எப்பொழுதுமே புயல்தான் — நான் தாராவைப் பார்த்து. அவள் மனோகரனுக்கு ஏற்றவளாக இருந்தால் மணம் முடித்துவிடலாம் என்று ஒரு கணம் எண்ணினேன். மறுகணம், தாரா இடத்தில் என்னையே நிறுத்திப் பார்த்தேன் — முடிவு காணமுடியாமல், தாராவைப் பார்க்கச் சென்றேன்.

தாராவிற்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்தாள், தங்கம்மாள்.

நாங்கள் இருவரும் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தோம்.

தாரா, மூன்றுமாத ஓய்வில் வந்திருப்பதாகக் கூறினாள். அவளை, என் வீட்டிற்கு விருந்துக்கு வரும்படி

அழைத்தேன். அவளும் என் அழைப்பை உடனே ஏற்றுக்கொண்டாள்.

நான் இரவாகிவிட்டதால், வீடு திரும்பினேன். வரும் வழியில், நகராண்மைக் கழக கட்டிடத்தைத் தாண்டி வருகையில், அதன் எதிரில் பன்னீர் மரம் வளர்க்க இரும்புக் கூண்டுக்குள், செடிகளை நட்டிருக்கும் காட்சியைக் கண்டேன். ஆடு, மாடு, கடித்துக் கெடுத்து விடாமல் இரும்புக்கூடு அமைத்திருந்தார்கள். அது வளர்ந்து, உயர்ந்துவிட்டால், கூண்டு நீக்கப்படும். எனக்கு, அந்த பன்னீர்ச்செடியின் உருவில் தாராதான் தென்பட்டாள். அவள் கட்டுக் காவல் இல்லாமல் விடப்பட்டிருக்கிறளே, அவள் எப்படி இருப்பாள் என்ற சிந்தனை தான் என் மனதைக் குழப்பிற்று.

* * *

வீட்டிற்குள் வந்தேன். நான் பதறிப்போனேன். அவர், படுக்கையில், படுத்திருந்தார். கம்பளி போர்த்தப் பட்டிருந்தது. அலமேலு என்னைக் கண்டதும், அழுங் குரலில், 'ஐயோ, சுரமென்றால், தாங்கமுடியாத சுரம் அடிக்கிறது' என்றாள்.

எனக்கு என்செய்வதென்று புரியவில்லை. அவர் அருகில் சென்று அமர்ந்தேன். அவர் நெற்றியைத் தொட்டுப்பார்த்தேன். அவருக்கு அடிக்கும் சுரத்தை விட எனக்கு அதிகசுரம் அடிப்பதுபோலிருந்தது. இன்று தான் என் கரம் அவர்மீது முதன் முதல் பட்டது! என் கரம் நடுங்கிற்று. நெற்றியிலிருந்து என் கரம் அவர் முகத்தைத் தடவி, அவர் நெஞ்சுவரை சென்றிருக்கிறது. அது எனக்குத் தெரியவில்லை.

அந்த இரவிலும், தெருக்கோடியிலுள்ள டாக்டர் சேகரை அழைத்துவந்தேன். அவர் வந்து பார்த்து விட்டு, மருந்துகொடுத்துச் சென்றார். அன்று இரவு முழுவதும் நான் தூங்கவில்லை. அவர் அருகிலேயே இருந்

தேன். அவர் சுரத்தில்கூட, என்னைப்போய் படுத்துத் தூங்கும்படிக் கேட்டுக்கொண்டார். என்னுல் படுத்திருக்க முடியவில்லை. படுத்தாலும் தூக்கம் வராது என்பது தெளிவாகத் தெரிந்தது.

விடிந்ததும், நான் பள்ளிக்கு இரண்டுநாள் ஓய்வு வேண்டி கடிதம் அனுப்பிவிட்டேன்.

சமையல் வேலைகளைச் செய்தே யறியாத நான், அவருக்குக் கஞ்சுபோட்டுக் கொடுத்தேன். மருந்து, குறிப்பிட்ட நேரத்தில் கொடுத்தேன்.

அவர் என்னைக் காணும்பொழுதெல்லாம் கண்களை மூடிக்கொண்டார் -- கண்ணீர்த்துளிகள் அவர் கண்களிலிருந்து வழிந்தன.

* * *

தாரா வந்தாள் — அவளை வரவேற்று உபசரித்தேன்.

அப்போது அவர் அறையில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருந்தார். சுரத்திலிருந்து தெளிந்து, இன்றுதான் தலை முழுகியிருந்தார்.

'உள்ளே யார்?'

'அவர்......'

'ஓ, அவரும் உன்னேடுதான் இருக்கிருரா?'

'தாரா — தவருக நினைத்துக்கொள்ளாதே! அவர் என் நண்பர் — உறவினர் — அவர் இங்கேதான் வேலை பார்க்கிருர்'

'என்ன வேலை'

'என்னைப்போலவே......'

'அப்படியா வாத்தியார் — வாத்தியாரிச்சி......'

அவள் சிரித்தாள் — எனக்குக்கூட தேன் சொட்டு விழுந்தது போன்ற இனிப்புணர்ச்சிதான் ஏற்பட்டது. எங்கள் இருவரையும் இணைத்து யார் பேசினாலும் இன்ப மாகவே இருந்தது.

அவரை வெளியில் அழைத்தேன். வெளியில் வந்தார்.

'இவள் பெயர் தாரா — எங்கள் தலைமையாசிரியை தங்கம்மாளின் தங்கை — நர்சு வேலை — இன்னும்......'

'உங்களைப்போல, இரட்டையராகவில்லையென்கிறீர் களா?'

குறும்புக்காரி தாரா, என்னையும் அவரையும் சேர்த்துப் பேசுவது, எவ்வளவோ சொல்லமுடியாத ஆனந்தத்தைத் தந்தாலும், கண்டித்தேன். அவர் மனதிற்குள்ளே சிரித்து மகிழ்ந்திருப்பாரோ என்னவோ அறியேன்!

தாரா, அவரோடு, வேடிக்கையாகப் பேசினாள். அவரும் அதைவிட வேடிக்கையாகப் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

'மங்கையர் அன்புதான் குளிர்தரும் மரம் — நோய் தான் வெய்யில் — இந்நோய்தீர, மங்கையர்களாகிய எங்கள் நிழல் நாடி வருகிறார்கள் ஆடவர்' என்றாள் அவள்.

'மங்கையரை, புராணக்காரர் கூறும் கற்பகத்தருவிற்கு ஒப்பிட்டாலும் நான் மறுக்கமாட்டேன்'

அப்படி எல்லா மங்கையரையும் சொல்லிவிட முடியுமா? சில மரங்கள் விஷத்தைத் தருகிறது. நான்

நேற்று ஏதோ ஒரு பத்திரிகையில் படித்தேன். மெக்சி தேசத்திலே ஒரு மரம் இருக்கிறதாம். இந்த மரத்தின் அடி மரம் வளைந்தும், பின்னியும் இருக்குமாம்—இதைத் தொடுபவர்களுக்கு உடனே விஷசுரம் வந்துவிடுமாம்'— இதற்கு ஆரஞ்சு அளவிற்கு சதைப்பிடிப்பே இல்லாத காய்கள் உண்டு. இவை வெடிக்கும்பொழுது யாரேனும் அருகில் மாட்டிக்கொண்டால் பலத்த காயங்களேற்படு மாம்—அடிபட்டவர் மரணமடைந்தும் விடுவராம்'

'இத்தகைய விஷவிருட்சம் இலட்சத்திலே ஒன்று. அதே பத்திரிகையில் வேறொரு பக்கத்தில் வேறொரு மரம் பற்றி எழுதியிருக்கிறதே பார்க்கவில்லையா? தென்னை, பனை, கமுகு போன்றவைகளுக்கு சுண்ணும்பை உர மாகப் போடுவதுண்டு. அவை, சுண்ணும்பு சத்தை அதிகம் உட்கொண்டுவிட்டால் அவைகளின் காய்களில் முத்துக்கள் உண்டாகும். மூங்கில் இனத்தில் ஒரு வழ வழப்பான பொருள் உண்டு. இது சமயங்களின் கணுக் களில் ஒட்டிக்கொள்ளும். அது நீலக்கல்போல ஒளி வீசும்—இப்படி முத்தும், வைரமும் தரும் மரங்களும் உண்டு!

அவர்கள் ஏனே, மர ஆராய்ச்சியிலே இறங்கிவிட் டார்கள். எனக்கோ, பக்கத்து வீட்டுப் பட்டுப்போன நாரத்தை மரந்தான் நினைவில் வந்தது. கண்கள் கலங்கி விட்டன. ஒருவருக்கும் தெரியாமல் கண்களைத் துடைத் துக்கொண்டேன்—தாரா போய்விட்ட பிறகும், நான் அந்த பட்டமரத்தையே எண்ணி எண்ணி பயந்தபடியே இருந்தேன்.

* * *

அன்று இரவு படுக்கையில் புரண்டு புரண்டு படுத் தேன். எனக்குத் தூக்கம் வரவேயில்லை. எப்படித் தூங்கினேன் என்று எனக்குப் புரியவில்லை.

பட்ட மரம்

நீள சட்டை, கருப்புக் கோட்டு, பெரிய தலைப் பாகை இவைகளோடு காட்சியளித்தான் ஒரு மந்திரவாதி.

அவன் என்னைக் கையைப்பிடித்து இழுத்துக் கொண்டே போனான். ஒரு திறந்த வெளியில், பறந்து கிடக்கும் மணலில் உட்காரக் சொன்னான்.

நான் வியப்போடு அமர்ந்தேன். மந்திரவாதி திடீரென மறைந்துவிட்டான். பிறகு, ஒரு பட்டுப் போன நாரத்தை மரத்தை ஒரு கிளையைப் பிடித்துத் தரதரவென இழுத்துக்கொண்டு வந்தான். என் எதிரில் நிறுத்தினான்.

அவன் கையிலிருந்த கோலை ஆட்டினான். ஒரு மாலை வந்தது அதனை மரத்தின்மீது போட்டான்.

என்ன ஆச்சர்யம்? அந்த மரம் துளிர்த்து, வளர்ந்து, நாரத்தைப் பழத்தோடு காட்சியளித்தது.

அதில் ஒரு இலையைப் பிய்த்தான். தன் கையில் தேய்த்து, அந்த சாற்றால் எனக்குப் பொட்டிட்டான். ஒரு பூவை எடுத்தான். அது மலர்மாலையாக மாறிற்று. அதனை என் கழுத்தில் போட்டான்.

என்னை மீண்டும் கரத்தைப் பற்றி இழுத்துவந்து, ஒரு பெரிய பளிங்கு மண்டபத்தின் நடுவில் விட்டான். தொட்டான். முத்தமிட்டான்.........

நான் விழித்துக்கொண்டேன். அத்தனையும் கன வென்பதைக் கண்டேன்.

மனோகரன் என் வீட்டில் தங்கியபிறகு, பக்கத்து வீட்டைக்கூட மறந்துவிட்டேன். நிலாவைச் சந்திப்ப தையும் நிறுத்திவிட்டேன்.

புத்தர்மூலம், 'வாழ்க்கை'யில் கட்டுரைகள் வெளியிடும் முயற்சியையும் விட்டுவிட்டேன்.

ஆனால், பக்கத்து வீட்டுப் பட்டுப்போன நாரத்தை மரம் என் நெஞ்சைவிட்டு நீங்கவே இல்லை. அது இன்று கனவிலும் வந்துவிட்டது.

பொழுது விடியட்டும் என்று காத்திருந்தேன். விடிந்ததும் சென்று நிலாவிடம் இந்தக் கனவையே கூறிவிடுவது என்று முடிவு செய்தேன். கனவின் கருத்துகூட, என் மனதிற்குத் திருப்தியையும் தெம்பையும் தந்ததால் உடனேயே எழுந்து, விளக்கையேற்றி விட்டு, என் பேனாவை எடுத்துவைத்து ஏதோ எழுதினேன்.

**'பட்டமரம் துளிர்த்தது — விட்ட பசுமை வந்துவிட்டது! பூவும், பிஞ்சும் இதோ காவெனக்கூவும் புள்ளினங்களே! பாடி வாரீர், இன்பக் கூடுகட்ட தேடிவாரீர் -- ஓடி வாரீர்'** இப்படித் தீட்டிவிட்டேன்.

## மனோகரன்

நாம் ஒன்று நினைக்க, நடப்பதொன்றாகவே இருக்கிறது. ஆனால் நாம் நினைப்பதையே நடத்திவைக்க முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதிலே யாருக்கும் எதிர்ப்பிருக்க நியாயமில்லை. ஏனெனில், எந்த மனிதனும் தான் நினைப்பது நடக்கக்கூடாது என்று எதிர்பார்க்கமாட்டான்.

மனிதன் தன் மன ஆசைகள் அப்படியே முழுக்க முழுக்க நிறைவேற வேண்டும் என்றே கருதுகிறான். அதனால்தால் அந்த ஆசை நிறைவேற தன் முயற்சியிலும், தகுதியிலும்கூட நம்பிக்கை வைக்காமல், நாள் பார்க்கிறான்—கோள் பார்க்கிறான், அம்மனிடம் பூ வைத்து கேட்கிறான். ஐயனுக்கு சர்க்கரை பாவாடை போடுகிறான். சோதிடனைத் தேடுகிறான்--மந்திரக்காரனை நாடுகிறான். எல்லாம் மனித மன ஆசைகள் நிறைவேறவேண்டும் என்ற விடாப்பிடியான ஆசையினால் தான். இந்த ஆசை எவ்வளவு வலுவாகவும், நிலையாகவும் உள்ளது என்பதற்கு ஆதாரம் வேறெங்கும் தேட வேண்டியதில்லை. இன்று நம் நாட்டில் நடமாடும் எந்த பத்திரிகையை எடுத்துக்கொண்டாலும் உங்கள் ராசி பலன், நாளை நாள் எப்படி, சோதிடப் பகுதி போடாத பத்திரிகையைப் பார்க்க முடியவில்லை. அதுமட்டுமல்ல, அப்படிப் போடுகிற பத்திரிகைகளின் 'ஜாதகமே' நன்றாக இருக்கிறது.

ஆனால் நான் புறப்படுவதற்கு நாளும் பார்க்கவில்லை, நட்சத்திரமும் தேடவில்லை. துணைக்கு நண்பனைத்தான் தேடினேன்.

எனக்கு வயதான தாய் உண்டு. அவர்கள் அருங் குணவதி—அன்பின் திருவுரு—பழங்கால பண்புகளின் உருக்கு சிலே. எப்போதும் என்னைத் திருமணம் செய்து கொள்ளச்சொல்லித் தொந்தரவு செய்தபடியே இருப்பார்.

அம்மா பேசாத நேரத்தில் அண்ணன் **அம்மை யப்பன்** பேசுவார். அவர் மணமானவர். கோவா பரேடிவ் பால் கம்பேனியொன்றில் வேலே பார்த்து வந்தார். அவர் திருமணத்தின் அவசியத்தை வலியுறுத் துவார்.

அவர் போய்விட்டால், அண்ணி **அமுதவல்லி** நச் சரிக்க ஆரம்பித்துவிடுவார்.

திருமணம் செய்துகொள்ள எனக்கு விருப்பமில்லே யென்று நான் சொல்லிக்கொள்ளவில்லே. விருப்பம் நிறைய இருக்கிறது. ஆனல், திருமணத்தை நான் மற் றவர்கள் போடுகிற கணக்குப்படி கணக்கிடவில்லே. திருமணம் என்பது மனிதனின் வாழ்க்கை காலண்ட ரில் வந்து போகும் சிகப்பு மையால் குறிப்பிடப்படும் நாள் மட்டுமல்ல அந்நாள் முதல், காலண்டரே புதிய தாக மாறுகிறது — மாற்றப்படுகிறது. ஆகவேதான் அதற்காக அதிக சிந்தனே செலுத்துகிறேன்.

எனக்கு உயிருக்குயிரான தோழன் சாரங்கன். எனக்கு மட்டுமல்ல, என் குடும்பத்தினர் அனேவருக் குமே, அவன் மிகவும் வேண்டியவன். அவனிடம் மட்டுமே என் உள்ளத்தைத் திறந்துகாட்டிப் பேசு வேன்.

அவன் முறைக்கு அவனும், என்னைத் திருமணம் செய்துகொள்ளச்சொல்லி வற்புறுத்தினன். நான் அவ னிடம் மட்டுமே, இதுபற்றி பதில் கூறினேன். அது

வும் அவனேடு விவாதமே நடத்தினேன்—அவன் முடிவுப்படித்தானே, வெளியூர் புறப்பட்டேன்.

* * *

ஊர்மெச்ச இலட்சியம் பேசும் சில உத்தமர்களை நான் அறிவேன். சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு இலட்சியத்தைத் திருத்திக்கூறும் வித்தகர்களை நான் பார்த்திருக்கிறேன். எனக்கு அவர்களைக் கட்டோடு பிடிப்பதில்லை.

வீட்டிலே, அப்பளம் போடுவார்கள், அருகிலிருக்கும் குழந்தைகள் அந்த மாவில் ஒரு உருண்டை எடுத்துக்கொண்டு ஓடுவர். தங்கள் மனம்போன போக்கில் அதை தட்டையாகத் தட்டுவர் — பிறகு உருண்டையாக்குவர்— பிறகு நீட்டுப் போக்கில் தட்டியடையாக்குவர்—மீண்டும் உருண்டையாக்குவர். இப்படிச் செய்வதாலே, அந்த மாவும் அழுக்காகி, பயனின்றி கெட்டுவிடும். அதுபோல சிலர், நல்ல இலட்சியங்களை எடுத்துக்கொண்டு, அப்பளம் மாவை எடுத்துச் செல்லும் சிறுவர்களைப்போல நடந்துகொள்கிருர்கள்!

கலப்பு மணம் செய்துகொள்ளவேண்டும் என்று ஊராருக்கு உபதேசம் செய்வார்கள்—ஆனல், தாங்களோ, உறவினர் வீட்டிலே பெண் கொள்கின்றனர். இத்தகையவர்களைக் கண்டாலும் எனக்குப் பிடிக்கவில்லை.

நான் என் இலட்சியத்திற்காகத் திருமணம் செய்துகொள்வது என்று முடிவு செய்துவிட்டேன். அதாவது, கலப்புத் திருமணம் செய்வது என்று முடிவு கட்டிவிட்டேன். அதற்காகவே, சாரங்கனேடு புறப்பட்டேன்.

* * *

நாங்கள் ஊரைவிட்டு புகைவண்டி நிலையத்திற்குப் போக ஒரு குதிரை வண்டியில் ஏறினோம். அந்தக் குதிரை வண்டி ஓட்டுவோன், எங்கள் இருவருக்கும் அறிமுக மான குலாம்காதர்.

அவன் குதிரை அடிக்கடி 'இடக்கு' செய்துகொண்டே வந்தது.

'என்ன குலாம், குதிரை மிகவும் இடக்கு செய்கிறதே' என்றான் சாரங்கன்.

'ஆமாங்க, ஆயிரம், இரண்டாயிரம் செலவு செய்து கட்டிவர்ர பொண்டாட்டியே இடக்கு பண்ணுராளே — இது குதிரைதானுங்களே' என்றான் அவன். அவன் எப்போதும் குறும்பாகப் பேசுபவன்.

'பெண்டாட்டி இடக்குப் பண்ணினாலும் திருத்திக்க முடியுமே — இது முரட்டு சாதியாச்சே — திருந்தாதே' என்றான் சாரங்கன்.

'ஆமாங்க, அதனால்தான் எதையும் பார்த்து யோசித்து, அறிந்து முடிக்கணுங்க—ஆள்பகட்டைப் பார்த்து, வீண்பேச்சைக் கேட்டு, விரயம்பண்ணிட முடியாதுங்க— பிறகு காலமெலாம் கஷ்டப்படவேண்டியது தானுங்க' என்றான் அவன்.

'கல்யாணமின்னு செய்துவிட்டால் எல்லாம் சரியாகி விடாதா?' என்றான் சாரங்கன்.

'என்னங்க, எப்படிங்க சரியாகிவிடும் — இந்த வண்டிக்கு ஏற்ற குதிரையாயில்லாட்டா, வண்டி எப்படிங்க ஓடும் — வண்டிக்கு வண்டி போயிடும் — குதிரைக்கு குதிரையும் பாழாகிவிடும்' என்றான் அவன்.

நான் இதுவரை பேசவில்லை. ஆனால் குலாம் காதரின் பேச்சிலே அருமையான வாழ்க்கைத் திட்டம்

பொதிந்திருப்பதை யுணர்ந்தேன். அதிலேயே மனம் ஒன்றியிருந்தேன்.

'வாழ்க்கையெனும் வண்டிக்கேற்ற, வாழ்க்கைத் துணையென்ற குதிரை வேண்டும்' என்றேன் நான்,

'நூற்றிலே ஒரு பேச்சுங்க — ஆனல், அது குதிரை தானேண்ணு எந்த நேரமும் சவுக்கும் கையுமாக இருக் கிற சண்டாளன்களுமுண்டு. வேளாவேளைக்கு கொள் ளும் தீனியும் வைத்து, குறிப்பிட்ட நேரங்களில் வேலை வாங்கும் வண்டிக்காரர்களுமுண்டு' என்ருன் குலாம் காதர்.

பல்கலைக்கழக படிப்பு இருந்தால்தான் அறிவுபெற முடியும் என்று எவரும் எண்ணவேண்டியதில்லை. அனு பவம் என்ற பல்கலைக் கழகத்திலே பயின்று, பட்டம் பெற்றவன் குலாம்காதர். அவன் கூறும் அறிவுரைகள் வாழ்க்கைக்கு எவ்வளவோ பயன்படக்கூடியன.

* * *

புகைவண்டியில் ஏறி உட்கார்ந்தோம்.

எங்கள் எதிர்ப்புறத்தில் அழகே உருவான ஒரு ஆரணங்கு உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கத்தில் அவளின் தாய் அமர்ந்திருந்தாள். அந்த வண் டியில் ஒரே நெருக்கடி. சிலர் நின்றுகொண்டும் — வேறு சிலர் முண்டியடித்துக்கொண்டும் அந்த எதிர்ப்புற பலகையிலேயே இருப்பதைக்கண்டும் எனக்கு ஆச்சர்ய மாக இருந்தது. சாரங்கன் மட்டும் சிரித்தான்.

நான் சுற்றிலுமுள்ளவர்களைப் பார்த்தேன். அவர் கள் வெறிக்க வெறிக்க அந்த அழகியைப்பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த அழகியோ, எந்தப் பக்கம் திரும்பினுலும், ஆடவரின் விழிக்கணைகள் பாய்வதால், வெளிப்புறத்தில் தலையை நீட்டிக் கொண்டே வந்தாள்.

அப்போதுதான் எனக்கு நிலைமை புரிந்தது. அந்த அழகியைக் காணவே அவ்வளவு நெருக்கடி அந்த வண்டியில் என்று புரிந்து கொண்டான்.

மனித வாழ்க்கையில் உள்ள கோணலைக் கண்டேன். — மனதிற்குள்ளே சிரித்துக்கொண்டேன். உலகில், மனிதகுலம் அழகையே விரும்புகிறது. ஒவ்வொரு ஆடவனும் தனக்கு வாய்க்கவேண்டிய மனைவி உலகப்பேரழகியாக இருக்கவேண்டுமென்றே விரும்புகிறான். ஆனால் அப்படி வாய்த்துவிடுவதில்லை, எல்லோருக்கும். ஆகவே, அலங்கோலத்தை — கோரத்தை — வாழ்க்கைத் துணையாக ஏற்றவர்கள், எந்த இடத்தில் அழகு தெரிந்தாலும், அதனைக் கண்குளிரக் கண்டாவது, தங்கள் ஏமாற்றத்தைப் போக்கிக்கொள்ள முனைகிறார்கள். வாழ்க்கைத் துணைபெறாத வாலிபர்களோ, அழகைக் காணுகிறபொழுது அலைமோதுகிறார்கள். இப்படியொரு அழகின் திருவுருவமே, தனக்கு வந்து மகிழ்விக்கவேண்டும் என்று கருதி, அழகுத்திசை நோக்கி ஓடுகிறார்கள். அழகு எங்கே என்று அலைகிறார்கள்.

ஆனால் அழகு என்பதின் பொருளை அறியமாட்டாமல், மேனிவனப்பை மட்டும் அழகு என்றுகருதி ஏமாந்துவிடுகிறார்கள். உடல் அழகு வேறு-உள்ளத்து அழகுவேறு என்பதை உணரமாட்டாதவர்கள் வாழ்க்கையின் பிற்பகுதியில் பெருந்தொல்லைப்படுவார்கள். அழகு என்றாலே நற்குணம் என்றுதான் அகராதி கூறுகிறது. நற்குணமின்றி, நல்ல பொலிவான தோற்றமுள்ள ஒரு பெண் கிடைத்து என்ன செய்வது? இப்படி எண்ண மண்டிலங்களிடையே, என் சிந்தனை சிறகடிப்பு செய்துகொண்டிருந்தது.

*　　　*　　　*

சாரங்கனும், நானும், மாட்டுவண்டியிலேறி, சாரங்கனின் தோழி மரகதம் வீட்டிற்குச் சென்றோம். நாங்கள் போய்ச்சேர்ந்த நேரத்தில் அவள் வெளியில் சென்றிருந்தாள். சமையற்காரி போய் அழைத்துவந்தாள்.

மரகதத்தின், முதல் சந்திப்பே, என் மனதிலே பரிதாபத்தைத்தான் உண்டாக்கிற்று. அவளின் சோகம் கப்பிய முகமும், வெண்மேகத்திடையே மறைந்துள்ள நிலவைத்தான் நினைப்பூட்டிற்று.

இரண்டொரு தினங்களில் மரகதம், சாரங்கனைவிட என்னிடம் அதிக அன்பையும் பரிவையும் காட்டினாள். சாரங்கனே என்னைக் கேலி செய்தான்.

நான் பழைய கதைகளில் படித்திருக்கிறேன்;- அரசகுமாரன், தன் மனதிற்குரியாளைத் தேர்ந்தெடுத்து வருவதாகப் புறப்படுவான் வழியிலே ஏதேனும் ஒரு கிழவி வீட்டிலே தங்குவான். பக்கத்திலே உள்ள மலர்த்தோட்டத்திலே ஒரு மங்கையை சந்திப்பான். பிறகு அவளையே அடைவதென அவள் பின்னாலேயே சுற்றித்திரிவான். இப்படி பல கதைகள் உண்டு. அம்மாதிரிதான் என் வாழ்க்கையிலும் நிகழ்ச்சிகள் நடம்புரிகின்றன என்று எண்ணினேன். நான் என் மனதிற்குரியவளை தேர்ந்தெடுக்க வந்தேன். வந்த இடத்திலே, அத்தகைய தெரிவிற்கு உதவிசெய்ய தேர்ந்தெடுக்கப்பட்டவளோ, ஒரு கட்டிளங்குமரி — என் நிலை சிக்கலாயிற்று!

* * *

மரகதம், திடீரென்று அப்படிக் கூறியிருக்கக் கூடாது; கூறிவிட்டாள். என் மனதில் கூர்வாளைக் கொண்டு சொருகுவது போலிருந்தது.

'வேலையற்றவீணரை, எந்த **வீணி** மணந்துகொள்வாள்' என்று அவள் கூறியபிறகு என் மனம், மணத்தில் நாடவில்லை எப்படியேனும் ஒரு வேலையைத் தேடிய பிறகே, மறுவேலை பார்ப்பது என்று முடிவு செய்தேன்

அதனால்தான், முதல்நாள் 'வாழ்க்கை' பத்திரிகையாசிரியரிடம் மணத்தைப்பற்றிப் பேசிய நான் மறுநாள் அவர் வரும்படிக் கூறியும் போகவில்லை. சாரங்கனுக்கு என் போக்கின் கருத்து புரியவில்லை. அவன் வேறு தவ

ருன முடிவிற்கு வந்துவிட்டாளோ என்னவோ, திடீரென ஊருக்குக் கிளம்பிவிட்டான். எனக்கு வேலை கிடைக்கும்வரை அங்கேயே தங்கியிருக்க வசதி தரும்படி அவளிடம் கூறிவிட்டுப் புறப்பட்டுவிட்டான்.

சூழ்நிலை ஒரு நல்ல எழுத்தாளன் — அவன் எழுதும் பயங்கர துப்பறியும் நாவலே வாழ்க்கை. இதனை என் வாழ்க்கையின் மூலம் நான் அறிந்துகொண்டேன்.

*　　　*　　　*

எனக்கு அந்த ஊரிலேயே வேலையும் கிடைத்துவிட்டது. ஆகவே, மரகதம் வீட்டிலேயே தங்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது.

அவளுக்கு, பக்கத்துவீட்டு நிலா பேச்சுத்துணை — எனக்கு சில நாட்களிலேயே, நிலாவின் கணவர், புத்தன் நண்பராகிவிட்டார்.

நான் அடிக்கடி புத்தரைச் சந்திப்பேன். புத்தரிடம், நானும் மனம்விட்டு எல்லா விஷயங்களைப்பற்றியும் கூறுவேன். நான் அவரிடம் மரகதத்தைப்பற்றிக் கூறினேன். அவரும் ஆவலோடு அவளைப்பற்றிக் கேட்டார்— அவர் மனதிலும், அவளைப்பற்றிய நீண்ட சிந்தனை இருந்து வருகிறது என்று தெரிகிறது. அவர், அவளின் வாழ்க்கைப் புதிரைத் தெரிந்துகொள்ள வேண்டும். என்றார். நானும், என் எண்ணம் அதுதான் என்று கூறினேன். பொன்னைத்தேடி சுரங்கம் தோண்டினால், அதிலே புதிய உலோகம் கிடைத்தால் எப்படிச் சுரங்கத்தைத் தோண்டியவன் ஆச்சரியப்படுவானோ அப்படித்தான் நானும் ஆச்சரியப்பட்டேன்.

*　　　*　　　*

மரகதம் என்மீது அன்பை, மழைபோல் பொழிந்து வந்தாள். அந்த அன்பு மழையில் நான் மூழ்கித் திக்குமுக்காடிக் கொண்டிருந்தேன்.

அவள் என்மீதுகாட்டும் அக்கரையை, என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. என் காரியங்கள் எதுவானாலும் அவ்வளவு கவனமாகப் பார்த்துவந்தாள். என் வேட்டி, சட்டை துவைப்பதிலிருந்து, புத்தக அலமாரியில் புத்தகங்களை அடுக்குவதுவரையில் அவளே கவனித்துவந்தாள்.

எனக்கு அவளின் அன்பின் ஆழத்தை அறியமுடியவில்லை. சில பாடல்கள் படிக்கும்பொழுது ஒரு கருத்தும், பதம்பிரித்துப் பார்க்கும்பொழுது ஒரு கருத்தும் தருமே, அப்படித்தான் அவளின் நடவடிக்கைகள் இருக்குமோ என்று எண்ணினேன்.

அவள் ஒருநாள், என்னைப்பற்றி யறிந்துகொள்ள வேண்டும் என்று, ஒருநாள் கூட தாங்கள் முயற்சிக்கவே இல்லையென்று கூறி வருந்தினுள். அவள் வாழ்க்கையில் குறுக்கிட்டு, மாருத துயரத்திலாழ்த்தினவன் ஒருவன்; அவனும் இவ்வூர்தான் என்று குறிப்பிட்டாள். அதுமட்டுமா, அவனுக்குத் தக்க தண்டனை தரவேண்டுமெனவும் வேண்டினுள்.

எனக்கு அவள் ஒரு விடுவிக்க முடியாத விடுகதையாகவே தென்பட்டாள். ஆனுலும், புத்தரிடம் கூறி, இவ்விடுகதையை விடுவிப்பதென முடிவுசெய்தேன்.

அவளின் அன்பிற்கும், அவளின் சோகத்திற்கும் என்னுல் காரணம் காண முடியவில்லை. அவளிடம் முருங்கக்காயைப்பற்றி பேசினேன். அவளோ, மங்கையர் நிலைபற்றிக் கூறினுள்.

அவள், எனக்கு சுரமென்றவுடன் படாதபாடு பட்டாள். ஆனுல், அவள் என் திருமணத்தைப் பற்றியோ பேசியபடியிருக்கிருள். அவள் வேண்டுமென்றே அவளது பள்ளித் தலைமையாசிரியை தங்கம்மாளின் தங்கை தாராவை, எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள்.

பெண்களின் உள்ளம், ஒரு இரகசியக் குகையென்றே நான் கருதுகிறேன். இல்லாவிட்டால், என்னிடம்

அவள் வாழ்க்கையின் வளைவு நெளிவுகளைச் சொல்லியிருக்கக் கூடாதா? பெண்களை இழிவு செய்பவர்களே, பெண்கள் ஓட்டைவாயர்கள் என்று கூறுவார்கள். ஆண்கள் ஒரு காதில்செய்தியை வாங்கி மறு காதால் விட்டுவிடுவார்கள். பெண்கள் இரண்டு காதாலும் செய்திகளையும் வாங்கி, வாயால் விட்டு விடுவார்கள் என்று கேலி பேசுவார்கள். ஆனல், பெண்களின் உள்ளம் வெளியிடப்படாத பல எண்ணங்களின் மறைவிடம் என்பதை உண்மை அனுபவம் பெற்றவர் எவரும் மறுக்கமுடியாது!

* * *

அன்று புத்தரைச் சந்தித்தேன். அவரும் என்னை சந்திக்கக் காத்திருந்தார் என்று தெரிந்தது.

'புத்தரே, என்ன இன்று இவ்வளவு பரபரப்போடு காட்சியளிக்கிறீர்கள்?'

'உண்மையில் இன்று பரபரப்பு மட்டுமல்ல—என் மனதிலே சூழல்காற்று அடித்துக் கொண்டிருக்கிறது'

'என்ன? எனக்கொன்றும் புரியவில்லை'

'புரியும்படிக் கூறுகிறேன்—முதலில் நீங்கள் இந்த தேநீரை அருந்துங்கள்'

வரவழைக்கப்பட்டிருந்த தேநீரை அருந்தினேன். பிறகு இருவரும் வெளியில் புறப்பட்டோம்.

'மனேகர், இன்று நம் 'வாழ்க்கை' அலுவலகத்தின் மீது ஒரு பெரிய படையெடுப்பு'—

'என்ன காலிகள் கூட்டத்தை யாரேனும் ஏவி விட்டிருப்பர், கூலி கொடுத்து'

'சே, காலிகள் கூட்டமல்ல—கூலி பெற்றும் வரவில்லை. கன்னியர் கூட்டம்—அதற்குத் தலைமை வகித்து

வந்தது, நன்ருகப் பட்டப் படிப்பு படித்து முடித்து, ஒரு பள்ளியின் தலைமையாசிரியையாக உள்ளவள்.'

'ஏன் வந்தார்கள்?'

'ஏனு? எழுதுவது ஒன்று—நடப்பதொன்று--இலட்சிய மற்ற சடங்கள் என்று என்னைத் தாக்கினுர்கள்.'

'தாக்கினுர்கள்?'

'தடி கொண்டல்ல—நல்ல சுடுசொல் கொண்டு—என்னுல் தாங்கிக்கொள்ள முடியவில்லை'

'நீங்கள் என்ன அப்படிச் செய்கிறீர்கள்?'

'என்னையல்ல அவர்கள் தாக்குவது—எனது ஆசிரியர் பெருந்தகை அம்பலவாணரைத்தான்,'

'ஊருக்கு வெளிச்சம் காட்டுகிருர்கள் — உள்ளுக்குள்ளே, கும்மிருட்டாக இருக்கிருர்கள்'

புத்தர் அதற்குமேல் எதுவும் கூறவில்லை. அவர் ஏதோ சிந்தனையிலாழ்ந்திருக்கிருர் என்று தெரிந்து கொண்டேன்.

*　　　*　　　*

விட்டிலும், வெளியிலும் எனக்கு மரகதம் ஆராய்ச்சி—மரகதம் நடவடிக்கைகள் எனக்கு மிகவும் சங்கடமான நிலையையே உண்டாக்கிற்று,

அவள் நடவடிக்கையிலிருந்தும், அவள் பேச்சிலிருந்தும் எனக்கு அவள் மீது சந்தேகம் பிறந்தது. அவள் என் மீது மயக்கம் கொண்டு விட்டாளோ என்று ஐயம் தலை தூக்கி யாடிற்று.

அவள் தன்னை பட்ட மரம் என்று அடிக்கடி கூறுகிறாள். ஆனால், அதனைத் துளிர்க்க வைக்க என்னைத் தெரிந்தெடுத்து விட்டாளோ என்று எண்ணி பயந்தேன்.

அத்தகைய எண்ணம் அவள் மனதில் குருத்து விட ஆரம்பித்தால், அதை தடுத்துவிட வேண்டுமே என்று துடித்தேன்.

பட்டமரத்தை துளிர்க்க வைப்பது, பெரியதோர் காரியமானாலும், எனக்கு அத்தகைய பக்குவம் ஏற்படவில்லை. வாழ்க்கைக் கனியின் ருசியே அறியாத நான், எப்படி இந்தத் தியாக வேலையில் ஈடுபட முடியும்?

அவள் வாழ்க்கை அனுபவத்தில் முதியவள் மட்டுமல்ல, வயதிலும் முதியவள். அது மட்டுமா? பட்ட மர மாக்கப் பட்டோமே என்ற ஏக்கத்தில், அவளை என் புருக்கி நோயும் பிடித்துக் கொண்டிருக்கிறது. இந் நிலையில் அவள் துளிர்க்க வேண்டும்—அதற்கு என் துணை வேண்டும் என்றால் எப்படி முடியும்?

ஆகவேதான், நான் அவள் மனதில் அத்தகைய தவறான ஆசையை வளரவிடக் கூடாது என்று அஞ்சினேன். ஆனால் சந்தர்ப்பம் அந்த ஆசையை வேக வேகமாக வளர்த்து வருகிறது. ஆசை, விசித்திரமான ஒரு கொடி. அது நிமிடத்திற்கு நிமிடம் வளர்ந்து கொண்டேயிருக்கும். ஆனால் அது பட்டுப் போகிறதென்றால், அதிலிருந்து வரும் விஷ நெடி, பெரிய விபத்துகளை உண்டாக்கிவிடும். இதற்காகத்தான் பயந்தேன் இதனை புத்தரிடம் சொல்லியிருந்தேன். அவர் மெதுவாக, அந்த இடத்தை விட்டுப் பிரிந்து விடு என்று கூறியிருந்தார். ஆனால் நான் எப்படி பிரிய முடியும்? நான் வராமல், தான் உண்ண மாட்டேன் என்று கூறும் பெண்ணை விட்டு எப்படிப் பிரிந்திருக்க முடியும்?

* * *

இப்படி நான் மனப்போரில் முழு நேர வீரனாக ஈடு பட்டிருக்கும் பொழுது எனக்கு வீட்டிலிருந்து கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு கடிதமும் என் மனதைப் புண்படுத்துவதாகவே இருந்தன.

மரகதத்துடன் நான் இருப்பது, ஊரார் கேலிக்குரியது என்பதுதான் அந்தக் கடிதங்கள் ஒவ்வொன்றும் சுட்டிக்காட்டும் உண்மை.

எனக்கு அதுதான் மிக எரிச்சலைத் தந்தது. இந்த உலக மக்களின் குருட்டுக் கண்களுக்கு, ஒரு ஆணையும், பெண்ணையும் சேர்த்துப் பார்த்தாலே, அவர்களை வாழ்க்கை இரட்டையர் என்றே கணித்து விடுகிறது—அதனைப் பொய்ப்பிக்க வேண்டும் என்று முரட்டுப் பிடிவாதம் என் மனதில் குடி வந்தது.

மனித மனத்திற்கே பிடிவாதம் இயற்கைக் குணம் என்றே கருதுகிறேன். சிறு குழந்தைகள் ஒரு காரியத்தைச் செய்கிற பொழுது செய்யாதே என்று கூறினால், அதை செய்துதான் பார்க்கும். செய்யப்படும் காரியம் நல்லதோ, கெட்டதோ அதைப்பற்றிக் கேள்வி இல்லை. ஆனால் தடுக்கப்படும் காரியத்தை செய்தே தீரும். உதாரணமாக விளக்கைத் தொடுவது கூடாது என்று குழந்தையைத் தடுத்தால், அதையே செய்யும். பெற்றோர்கள் எதிரில் செய்தால் தடுத்து விடுவார்கள் என்பதாலே அவர்கள் கண் மறைவில் செய்யும் விளக்கு சுட்டாலே நிறுத்தும். இப்படி தீய காரியத்தை மட்டுமல்ல—நல்ல காரியத்திலும் அப்படித்தான். பேனாவை எடுக்கக் கூடாது என்றால் எடுத்து எழுதிப் பார்க்கும். இந்த குழந்தை சுபாவம் வளர்ந்து வரும்பொழுது மனிதனிடம் பிடிவாதக் குணம் நிலைத்து விடுகிறது அதுவும் எனக்கு, எதையும் பிடிவாதமாகச் செய்வதில் அலாதியான பிரியம்—என்னை பெற்றோர்களும், மற்றவர்களும், மரகதத்துடன் சேர்ந்திருப்பதை தடுப்பதாலே, அதனைத்

தொடர்ந்து செய்ய வேண்டும் என்ற எண்ணமே அதிக மாக ஆட்டி வைத்தது.

மரகதத்தின் மனதிலே மயக்கத்தையும், மற்றவர் கள் உள்ளத்திலே சந்தேகத்தையும், என் உள்ளத்திலே சங்கடத்தையும் தரும் வகையில்தான் என் இருப்பிடம் இருந்தது. இருந்தாலும் வெறும் அன்பு மட்டும், இரு இளம் ஆண், பெண்ணையும் சேர்த்துவைக்க முடியும் என் பதைக் காட்ட வேண்டும் என்ற பிடிவாதம் என் மனதைவிட்டு அகலவில்லை.

* * *

சமையற்கார அலமேலுகூட ஏதோ எங்களைப் பற்றி முடிவிற்கு வந்துவிட்டவள்போல, என்னைக் கண்டதும், ஏதேனும், சாக்குபோக்கு காட்டி, என்னை யும் மரகதத்தையும் தனித்து விட்டுவிட்டுப்போய் விடு வாள்.

நான் ஓய்வு நேரங்களில் படங்கள் எழுதுவது பழக்கம்.

நான் அன்று ஒரு ஓவியம் தீட்ட முனைந்தேன். நான் ஏற்கனவே அரைகுறையாகப் போட்டுவைத் திருந்த ஒரு படத்தைத் தேடி எடுத்தேன்.

அப்படத்தைப் பார்த்து நான் திடுக்கிட்டேன், அது மிகவும் அழகாக எழுதப்பட்டிருந்தது. நான் அதனை முடிக்காமல் போட்டிருந்தேன். அதனை யாரோ அழகாகப் போட்டிருந்தார்கள். அந்தப் படத் தில் ஒரு மரம், இலையுதிர் காலத்து காட்சியில் சித்தி ரிக்க நான் முயற்சித்திருந்தேன். ஆனால் அந்தப்படம் வேறு மாதிரியில் மாற்றப்பட்டிருந்தது. நல்ல பெரிய மரம், இலைகளையிழந்து காய்ந்து கிளைகளுடன் காட்சியளித்தது. அந்த மரத்தின் அடிப்பாகத்தில் ஒரு பெண்ணின் முகச்சாயல் தெரிவதுபோல் இருந்தது.

ஒரு இளைஞன், அந்த அடிப்பாகத்தில் நீர் பாய்ச்சுகிறான். அவன் உழைப்பால், இரண்டொரு கிளைகளில் தளிர்கள் தோன்றுவது போலிருந்தன. இதனைக்கட்டாயம் அவள்தான் எழுதியிருக்கவேண்டும். வேறு யார் பட்டமரத்தில் துளிர்ப்பது போன்ற படத்தைத் தீட்டப் போகிறார்கள்? அவள் மன நிலையை அப்படியே படமாகத் தீட்டிவிட்டாள். நான் அப்படத்தை ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்தேன்! அவளது சித்திரத் திறமையை நான் வியந்தபடி அந்த வாலியன் உருவத்தைப் பார்த்தேன். அது என்னைப்போலவே எழுதப்பட்டிருந்தது. நான் சிலைபோல, மூச்சிழந்து அமர்ந்துவிட்டேன்.

அப்போதுதான் மரகதம் புதிய பெண் தாராவுடன் உள்ளே வந்தாள். அவளை எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள்.

அவள் அழகி மட்டுமல்ல — வேடிக்கை பேச்சில் வெகு கெட்டிக்காரி என்பது கொஞ்சநேரப் பேச்சிலிருந்து தெரிந்துகொண்டேன்.

அவளோடு வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருக்கையில்கூட, என்மனம், அந்தத் திருத்தப்பட்ட ஓவியத்தின்மீதே படிந்திருந்தது.

தாராவை, அவள் அழைத்து வந்ததிலிருந்து, என் மனம், பெரிய ஆராய்ச்சியிலீடுபட்டுவிட்டது. அவள், என்னையே விரும்புகிறாளா — அல்லது, அவள் என்மூலம், அவளை ஏமாற்றியவனைக் கண்டுபிடித்து அவன்மூலம் வாழ்வு பெற விரும்புகிறாளா என்று யோசித்தேன்.

என்னையே அவள் அடைய விரும்பினால் அதுமுடியாத காரியம்—ஆனால் என் மூலம் இழந்த அவளின்

துணைவனை மீண்டும் பெற நினைப்பது முடியக்கூடிய காரியம்.

அவளின் வாழ்க்கையை, இப்படிப் பட்டுப்போகச் செய்தவனைக் கண்டுபிடித்த பிறகுதான் நான் என் திருமணப் பேச்சைப் பேசுவதென்றே முடிவெடுத்துக் கொண்டேன்.

ஆனால், தாராவின் சந்திப்பு, எனக்கு, அந்த திரு மண நினைப்பையும் அடிக்கடி உண்டாக்கிக்கொண்டிருந்தது.

அவள் மூன்றுமாத ஓய்வில் வந்திருப்பதாகக் கூறினாள். ஆனால், மூன்றுமாத ஓய்வும், என்னோடு வேடிக்கை பேச்சு பேசுவதற்காகவே எடுத்ததுபோலவே, மாலை வரத் தவறினாலும், அவள் வரத் தவறுவதில்லை. இவள் வரவை மரகதம் விரும்புகிறாளா, வெறுக்கிறாளா, என்பதே எனக்கு புரியவில்லை. ஆனால், பெண்களின் இயற்கையான பொறுமையின் சாயல் அவளிடம் நிழலிட்டுக்கொண்டுதானிருந்தது என்பது புரிந்தது. ஆனால் தாராவை எனக்கு அவள் அறிமுகப்படுத்தியது ஏனென்று எனக்குப் புரியவில்லை.

* * *

தாராவின் மனதிலே நான் இடம்பிடிக்க ஆரம்பித்துவிட்டேன் என்பது அவளது 'அரட்டை' குறையிலிருந்து தெரிந்துகொண்டேன்.

என் மனதிலும், அவள் இடம்பெறுகிறாள் என்பது, அவளை, மாலை நேரத்தில் காணவிட்டால், என் மனத் தவிப்பின் மூலம் தெரிந்துகொண்டேன்.

காதல் ஒரு நோய் — அதனால் பாதிக்கப்பட்டவர்களைவிட, பாதிக்கப்பட்டவர்களைப் பார்ப்பவர்களே, அந்நோயைக் கண்டுபிடித்துவிடுவார்கள். இதனால்தான்

போலும்—மரகதம், எங்கள் நடவடிக்கைகளை, கூர்மை யாகக் கவனிக்க ஆரம்பித்தாள். மரகதத்தின் இந்தக் கண்காணிப்பு இருப்பதைக்கண்டுதான் தாராவும் என்னிடம் மனம்விட்டு எதையும் கூறமுடியாமல் தவித்தாள்.

ஒருநாள், என் பள்ளி வாயிலில் யாரோ, என்னைத் தேடுவதாகக் கூறினான் ஒரு சிறுவன். வெளியில் தாரா நின்றுகொண்டிருந்தாள். என்னையறியாமலே என் மனதிலே, ஒரு புல்லரிப்பு ஏற்பட்டது. அவள் கூப்பிட்டனுப்பிய நேரத்தில் எனக்கு வகுப்பு கிடையாது. ஆகவே, தலைமையாசிரியரிடம் கூறிவிட்டு, அவளுடன் புறப்பட்டேன்,

அவளும், அன்று ஏதோ என்னிடம் தனித்து பேசவேண்டுமென்றுதான்; பள்ளிக்கூடத்திலிருந்து என்னை அழைத்துக்கொண்டு போக வந்திருந்தாள். நானும் அவளிடம் மனம்விட்டு பேசிவிடுவதென முடிவு செய்தேன். இருவரும், எதும் பேசாமல், ஊரின் மத்தியிலிருந்த மலர்த் தோட்டத்திற்குச் சென்றோம். அங்கு உள்ள சிமெண்ட் பலகையொன்றில் அமர்ந்தோம்.

தாரா எதையெனதப்பற்றியோ என்னிடம் பேசியிருக்கிருள். ஆனல் தன்னைப்பற்றிப்பேச எண்ணியதும் தொண்டை யடைத்துக்கொண்டது. அது போலவே, அவளிடம் எவ்வளவோ வேடிக்கையாகப் பேசும் எனக்கு அன்று வார்த்தைகளே வற்றிவிட்டன. என் தொண்டைக்குழி எழுந்து எழுந்து அமிழ்ந்ததே தவிர பேசமுடியவில்லை. அவள் எச்சில் கூட்டி விழுங்கும் சப்தம் கேட்டதே தவிர, பேச்சு வரவில்லை. காதல் நோயின், ஆரம்ப அறிகுறிகளில், இந்த பேச்சடைப்பு முதன்மையானது—முக்கியமானது.

'தாரா'

'..................'

'பேசமாட்டாயா?'

'ஊமையில்லையே, நான்'

'ஏன், மரகதத்தை இன்று பார்க்கவில்லையா?'

'இல்லையென்பது, நான் பள்ளிக்கு வந்தபோதே தெரிந்திருக்கவேண்டுமே!'

'சரி ஏன் ஒரு மாதிரியிருக்கிருய்'

'எந்த மாதிரி'

'பேசாபடந்தை மாதிரி'

'நீங்கள் என்ன விக்கிரமாதித்ய ராசஞ என்ன'

'அப்படியாஞல் வேதாளம் இல்லையே!'

'வேடிக்கை போதும் வந்து,......'

'என்ன வந்து'

'நீங்கள் வந்து'

'எங்கு வந்து'

'இந்த பூந்தோட்டத்திற்கு வந்து'

'எதற்கு வந்து......'.

'ஐயோ, கொஞ்சம் உங்கள் குறும்புப் பேச்சுக்கு ஓய்வு கொடுத்துவிட்டு.........'

'சொல்லேன் தாரா—எதையோ சொல்ல நினைக்கிருய்—ஆனால் ஒளிக்கிருய்'

'ஆமாம், நீங்கள் இத்தனை நாட்கள் அறியாமல் தானிருக்கிறீர்களா?'

'எதை?'

'என் வாயாலேயே அதை வரவழைக்க வேண்டும் என்று பார்க்கிறீர்கள் அவ்வளவுதானே!'

'தாரா—அன்பே—உன் இதயத்தில் எனக்கு இடமிருக்கிறது என்பதை எப்பொழுதோ தெரிந்து கொண்டுவிட்டேன்.'

'கண்ணாளா, தாங்களின்றி இனி என் வாழ்க்கை இல்லை.'

'ஆனால் ஒன்றை நீ ஒப்புக்கொள்ளவேண்டும், தாரா.'

'என்ன'

'நம் திருமணத்திற்குக் கொஞ்சம் காலம் காத்திருக்க வேண்டும்'

'ஆமாம், நானும் அதையேதான் சொல்ல விரும்புகிறேன்'

'என்ன!'

'நான் ஒரு உறுதி எடுத்திருக்கிறேன்'

'உறுதியா?'

'ஆமாம்'

'நானும் அப்படித்தான் தாரா, ஒரு முடிவை மன தில் வைத்திருக்கிறேன்'

'என்ன முடிவு?'

'ஒரு பட்டமரத்தைத் துளிர்க்க வைக்கவேண்டும்!'

'அப்படியா? நான் எடுத்துக்கொண்ட உறுதி என்ன தெரியுமா? கருகிய பயிரை—கசங்கிய மலரை—மீண்டும் செழிக்கச்செய்யவேண்டும்!'

'இரண்டும் முடிந்ததும் நம் இன்பலோகயாத்திரை, தாரா'.

இப்படி எங்கள் உரையாடல் வளர்ந்தபடியிருந்தது. அவள் என் முடிவின் விளக்கத்தைக் கேட்டாள். நான் மரகதத்தின் வாழ்க்கைச் சிக்கலைத் தீர்க்க வேண்டும் என்று முடிவெடுத்துவிட்டேன். அதுவரை நம் திருமணம் தள்ளிவைக்கப்படவேண்டும் என்றேன். அவள் கூறிய உறுதியை விவரிக்கும்படிக் கேட்டேன். அவள் தன் தமக்கை தங்கம்மா வாழ்விலும், ஒரு பெரிய புதிர் மறைந்திருக்கிறது — அவள் இன்னமும் கன்னி யாகவே இருக்கிருள். அவள் வாழ்க்கைக் கோளா றையும் தீர்க்கவேண்டும் என்று உறுதியெடுத்திருக் கிறேன் என்ருள் அவள்.

பிறகு இருவரும் திரும்பினேம்—திரும்பி வருகையில், அவள் ஒரு உலகிலும் நான் ஒரு உலகிலும் நடந்து வருவது போலவே இருந்தது. ஏனெனில் இருவரும் எங்களுடைய உறுதி மொழிகளைப்பற்றிய சிந்தனை யோடே வந்தோம்.

* * *

புத்தரிடம், எனது மனதிற்கிசைந்தவளை தேர்ந் தெடுத்துவிட்டேன் என்ற மகிழ்ச்சிகரமான சேதியைச் சொல்லிவிட அன்று சென்றேன்.

அவர் அலுவலக வேலைகளில் ஈடுபட்டிருந்தார்.

'உங்கள் பத்திரிகையில் விளம்பரம் வெளியிடவேண்டுமானால், என்ன கட்டணம் செலுத்தவேண்டும், விபரம் வேண்டும்'

'ஏன், மணமகள் தேவையென்ற விளம்பரம் போடவா?'

'அதற்கு இப்போது அவசியம் இல்லை. அதற்கு அடுத்த கட்டத்திற்கு வந்தாயிற்று—திருமண அழைப்பு விளம்பரம் போடவேண்டும்?'

'யாருக்குத் திருமணம்'

'மனேகரனுக்கு.........'

'பெண் யாரோ?'

தாரா'

'நல்ல பொருத்தமான ஜோடி'

'அதனுல்தான் இருவரும் இணைந்துவிட்டோம். நேற்றுதான் அவள் சம்மதம் தந்தாள்'

'எப்போது திருமணம் வைத்துக்கொள்ளலாம்?'

'மரகதத்தின் வாழ்க்கை நிமிர்த்தப்பட்டபிறகு'

'அவள் வாழ்க்கை நிமிர்த்தப்படுவது எப்போது? நீங்கள் திருமணம் செய்வது எப்போது? மனேகர், மரகதத்தின் வாழ்க்கை விஷயத்தை என்னிடம் விட்டு விடுங்கள்.'

'இல்லை, அப்படி உறுதியான முடிவு செய்திருக்கி றேன்'

'அப்படியானால், அதுவரை தாரா காத்திருக்கத் தயாரா?'

'அவளும் அத்தகைய உறுதிமொழியொன்று எடுத் திருக்கிருள்'

'என்ன உறுதிமொழி'

'அவளின் தமக்கை தங்கம்மாள்பற்றிய இரகசியத் தைக் கண்டறிந்து அவள் மகிழும்படிச் செய்துவிட்டு பிறகே தனக்கு திருமணம் என்று அவள் உறுதியெடுத் திருக்கிருள்'

'விசித்திரமான நிபந்தனைகள்!'

புத்தர், இப்படிக் கூறிக்கொண்டே, கடிதக் கற்றை யிலிருந்து தேடி, ஒரு கடிதத்தை என்னிடம் காட்டினர். அதைப் பிரித்துப் படித்துப் பார்த்தேன். பிரமித்து விட்டேன்.

* * *

அன்புடையீர்,

வணக்கம்.

ஆந்தைக்கு, கிளி துணைபோகக் கூடாது.

தீயவருக்கு, நல்லவர் உதவியாளராக இருக்கக் கூடாது.

ஐயா, புத்தரே, தாங்கள், அம்பலவாணரெனும் அயோக்கிய சிகாமணிக்குத் துணை செய்யவே கூடாது.

நீங்கள் நேர்மையாளராக இருந்தால் உடனே, இவ் வேலையை யிட்டு நீங்கி விடுங்கள்.

இந்த வேலையைச் செய்வதை விட, வேறு எந்த இழிதொழில் செய்தாவது வாழ்க்கையை நடத்தலாம்.

இப்படிக்கு

மனமுடைந்துபோன

மங்கை.

இப்படி கடிதம் எழுதியிருந்தது.

அந்தக் கடிதத்தைக் கண்டதிலிருந்து என் மனம் குழம்ப ஆரம்பித்தது. அந்தக் கையெழுத்தும், தலைமை யாசிரியைத் தங்கம்மாள் கையெழுத்தும் ஒன்ருகவே இருக்கவே, என் மனதை, அந்த மர்மம் குடைய ஆரம் பித்தது. புத்தரும் அந்த மர்ம ஆராய்ச்சியிலே முழுக்க முழுக்க ஈடுபட்டிருந்தார்,

* * *

மரகதத்துக்கு என் காதல் மலர்த் தோட்டத்தில், தாரா பூத்துக் குலுங்குகிருள் என்று தெரிய ஆரம்பித் தது. ஆரம்பத்தில் அவள் அதனை வெறுப்பாக ஏற்றி ருக்க வேண்டும். ஏனெனில், தாராவிடம் முன்போலக் கலகலப்பாக பேசுவதில்லை தாராவுடன் கேலியுடன் அரட்டையடிப்பதை அடியோடு நிறுத்திவிட்டாள். என்னிடமும் அவள் பேசுவதை வரவரக் குறைத்து வந்தாள்.

ஆனல் அவள் முகம் இப்போது மேலும் சோகமாய் மாற ஆரம்பித்துவிட்டது. முதலில் சோகத்தின் நிழல் மட்டுமே அவள் முகத்தில் தெரிந்தது. இப்போது சோகத்தின் சதிரே, அவள் முகத்தில் நடப்பது போலி ருந்தது.

நான் தாராவின் குறுக்கீடே இத்தனைக்கும் காரணம் என்றுணர்ந்தேன். ஆனால், அவளின் தோழமையை ஏற்படுத்தி வைத்தவள் அவள்தானே என்றும் எண்ணினேன்.

அவளிடம் என் நிலையைப் புட்டுச் சொல்லிவிட்டால் ஒருவேளை அவள் சோகமும் மாறலாம்—என் மனக் குழப்பமும் தீரலாம் என்று எண்ணினேன்.

ஒருநாள் மரகதத்திடம் நேரில் என் மனநிலையைக் கூறி விடுவது என்று முடிவு செய்தேன். அன்று மாலை, அவள் வருவதற்கு முன்னாலேயே, வீட்டிற்கு வந்து அவள் வருகைக்காகக் காத்திருந்தேன். அவளும் வந்தாள்.

'காபி சாப்பிட்டீர்களா?' என்றாள்.

'சாப்பிட்டுவிட்டேன்' என்றேன்.

அவளிடம் இந்த விஷயம் குறித்துப் பேச முடிவு செய்தேன். ஆனால் என்னால் அந்தப் பேச்சை ஆரம்பிக்க முடியவில்லை. தொண்டை அடைத்தது.

'வாழ்க்கையில் புத்தர் ஒரு தொடர்கதை எழுத இருக்கிறார்' என்றேன்.

'தொடர்கதையாலேயே, பத்திரிகைகள் ஓடிவிடும் என்று இப்போது பலர் போட்டியிட்டுக் கொண்டு, தொடர்கதை வருகிறது என்று விளம்பரங்கள் போட்டு, வேகவேகமாக பத்திரிகை விற்பனையை அதிகரிக்கப் பார்க்கிறார்கள்' என்றாள்.

'தொடர்பு அறக்கூடாது என்று பத்திரிகை வாங்குவோர் விடாது வாங்குவார்கள் அல்லவா? அதனால்தான்

தொடர்கதைகளுக்கு அத்தகைய விளம்பரங்கள் செய்கிருர்கள்' என்றேன்.

'தொடர்கதை—ஆசிரியர்கள் பலர், அந்தந்த நேரத்திற்கும், நினைப்பிற்கும் தக்கவாறு எழுதித் தருகிருர்கள்—ஒரு கதையென்ருல் ஒரே மூச்சில் எழுதித்தர வேண்டும்—அப்போதுதான் பாத்திரத்தின் அமைப்பு முறையில் தடுமாற்றம் இல்லாமலிருக்கும்—உதாரணமாக ஒரு பிரபல ஆசிரியரின் நாவலொன்றைப் படித்தேன். அதில், ஒரு பாத்திரத்தின் பெயரே மாறிவிட்டது. அதனைப் பார்க்காமலேயே, பதிப்பகத்தாரும் வெளியிட்டு விட்டார்கள். வெளியில் குறிப்பு போட்டு, அந்த தவறைத் திருத்தியிருந்தார்கள்—ஆகவே தொடர்கதைகள் சில நல்ல ஆசிரியர்களால்கூட, சுவையோடு சொல்ல முடிவதில்லை' என்ருள் அவள்.

'புத்தர் அப்படியல்ல—ஏறத்தாழ கதையின் பெரும் பாகத்தை எழுதி முடித்து விட்டார். அதன் முடிவு எப்படி யென்பதுதான் புரியவில்லை. அதற்காகத்தான் யோசித்துக் கொண்டிருக்கிருர்' என்றேன்.

'என்ன கதை?' அவள் கேட்டாள்.

'பட்ட மரம் சொல்லவிட்டுப்போன கதை' என்றேன்.

'தலைப்பா—தலைப்பின் சாரமா?—' அவள் அடுத்த கேள்வி இது.

'தலைப்பேதான்!' என்றேன்.

அப்பொழுது அவள் முக மாற்றத்தைப் பார்க்க வேண்டுமே! என்னல் அவளின் முகமாற்றங்களுக்குரிய பதவுரை கூறமுடியவில்லை. அதற்கு அனுபவம் என்ற பல்கலைக் கழகத்தில் பயின்று பட்டம் பெற வேண்டும்.

'அந்தக் கதையின் சுருக்கம் என்ன தெரியுமா?—தெரிந்தால் சொல்லுங்களேன்!' என்ருள்,

புத்தர் உண்மையில், அப்படியொரு கதை எழுதலாமா என்று யோசித்துக்கொண்டிருக்கிருர் என்பது எனக்கே தெரியும். ஏனெனில் மரகதத்தைப்பற்றி அவர் அதிக ஆவலோடு விசாரிப்பதற்கு அதுவும் ஒரு காரணம் — சில எழுத்தாளர்கள், 'ஈயடித்தான் காப்பி' ஆசாமிகளாக இருக்கிருர்கள்—புத்தர் அப்படியல்ல—அவர் வாழ்க்கையைப் பார்த்து, கற்பனையை அமைப்பார்—அவர் திருடுவது உண்மைச் சம்பவங்களை! ஆகவே தான் அவர் புது நாவல் ஒன்று எழுத உட்காருகிருர் என்ருல், அவருடைய நண்பர்களே பயப்படுவார்கள். யார், யார் அதில் பாத்திரங்களாகி விடுவார்களோ என்ற அச்சம்! ஆனல் என்னைக்கேட்டால், ஒரு உண்மையான நாவலுக்குரிய இலட்சணமே இதுவாகத் தானிருக்கவேண்டும். அதில் வரும் பாத்திரங்களைப் படித்தவுடன், இது காட்டூர் கருணுகரன், இது காரமேடு கோபாலன், இது மருதூர் மங்கையர்க்கரசி என்று சுட்டிக்காட்டும் வகையில் அமையவேண்டும். உண்மைச் சம்பவம் எனும் அழகியணியும் உயர்தர ஆடையே கற்பனை—நவீனம். ஆகவே அந்நாவலைப்பற்றிக் கூறினல், அதன்மூலம் என் மன நிலையை ஒளிவு மறைவின்றி கூற வாய்ப்பு கிடைக்கும் என்று எண்ணினேன், அதுபோல் கதையின் சுருக்கம் கேட்டுவிட்டாள்; நான் யாது என்று சொல்லவில்லை. உடனே சுருக்கம் ஒன்று கூறினேன்.

'ஒரு பெரிய தோப்பு—அதற்கு ஒரு மரந்தோப்பு என்றே பெயர்—பலமரம் சேராமல் தோப்பாகாது என்பார்களே அந்தப் பழமொழி, இந்தத் தோப்பிற்குப் பொருந்தாது—அதில் ஒரு மரம்—ஆலமரம்—அது நன்ருக வளர்ந்து விழுதுவிட்டு செழித்து இருந்தது—அதற்கு செழிப்பையளிக்க, ஒரு வாய்க்கால் முன் வந்

தது -அந்த வாய்க்கால் மூலம் வந்த நீர் வேரில் பாய்ந்து வளர்ச்சிக்குப் பயன்பட்டது. பிறகு அந்த வாய்க்கால் நீரைத் தரவில்லை—நீரைத் தராதது மட்டுமல்ல—நெருப் பைத் தந்தது—ஆகவே ஆலமரம், வளராதது மட்டுமல்ல, பட்டுப்போயிற்று—இலைகள் உதிர்ந்து விட்டன—பார்க் கப் பரிதாபமாய், ஒப்பாரியிட்டு, மார்பில் அடித்து அழும் மங்கை போல் தலைவிரி கோலமாய் நின்றது. அந்தத் தோப்பின் பக்கத்து தோப்பின் காவற்காரன் ஒருவன்—அவனுக்கு மரம் என்றால் உயிர்—அவன் ஒரு மரந்தோப்பிற்கு வந்தான்—பட்டமரத்தையும் பார்த் தான்—அதற்கு நீரைத் தந்துவந்த வாய்க்காலையும் பார்த் தான். அந்தக் காவற்காரனுக்கு மர ஆராய்ச்சியில் மிக வும் ஆசை. ஆகவே அவன் மரம் பட்டுப்போனது ஏன் என்று கண்டுபிடிக்க முடிவு செய்தான். அவனுக்குத் துணையாக, ஒரு மரந்தோப்பில் குடிசை கட்டி வாழ்ந்து வந்த பூஞ்செடி பயிர்செய்பவன் ஒருவனும் சேர்ந்துகொண் டான். இருவரும் இந்த ஆராய்ச்சியில் வெகு தீவிரமாக ஈடுபட்டார்கள். காவற்காரனுக்கு மரம் பட்டுப்போனது எப்படி என்பதிலே அதிக நாட்டம்—பூஞ்செடி பயிர் செய்பவனுக்கோ, பட்டமரத்தை மீண்டும் எப்படித் துளிர்க்க வைப்பது என்பதிலே அதிக ஆசை—இவர்கள் இருவரும் ஒரு திட முடிவிற்கு வந்தார்கள்—வாய்க் காலின் துரோகத்தினால் மரம் பட்டுப்போயிற்று என்று! ஆனால் வாய்க்கால் ஏன் துரோகம் செய்தது என்பது காவற்காரன் ஆராய்ச்சி—பூஞ்செடி பயிர் செய்பவன் ஆராய்ச்சி, மீண்டும் அதே வாய்க்காலைக் கொண்டு, பட்டமரத்தை, துளிர்க்க வைக்கமுடியுமா என்பது. வாய்க்காலை இருவரும் நெருங்கி ஆராயும் பொழுது, வேறொரு மாமரம் அதன் வழியிலிருந்தது—அது பிஞ்சும் காயுமாக தீய்ந்தே போய்க்கிடந்தது. ஆனால், அந்த வாய்க்காலின் ஆரம்ப இடத்திற்கு அந்த இருவரும் போய்ப்பார்த்து விடுவது என்று கிளம்பினர் ......' என்று நான் கூறிக்கொண்டே போனேன், இந் தக் கதை முழுவதும் என் சொந்தக் கற்பனை—புத்தர் கதைக்கும் இதற்கும் சம்மந்தமில்லை.

அவள் குறுக்கிட்டுக் கூறினாள்—'இந்தக் கதைக்கு முடிவு எப்படி என்பது, புத்தருக்குத் தெரியவில்லையா என்ன!' என்று.

'மனதில் வந்ததை அவர் எழுத விரும்பவில்லை, வாழ்க்கையில் என்ன வரும் — வந்திருக்கும் என்று அறிந்து எழுத விரும்புகிறார்' என்றேன்.

'அப்படியானால், அந்த ஆலமரத்தையும், மாமரத்தையும்தான் கேட்கவேண்டும்' என்றாள்.

'மரம் பேசாதே!' என்றேன்.

'இந்த மரத்திலொன்று நன்றாக எழுதும்' என்றாள். அவள் தொண்டை அடைத்துக்கொண்டது அதற்குமேல் அவள் பேசவில்லை.

நான் எந்தப் பிரச்சினையைப் பற்றிப் பேசிட, இந்த அடிப்படையை ஆரம்பித்தேனோ அந்தப் பிரச்சினை பேச முடியாமல் போய்விட்டது. ஆனால், மாலைதொடுக்க, மலர் பறிக்கச் சென்ற தோட்டக்காரனிடம், மலர்ச்செடிகள் மாலையாகவே கட்டித் தந்தால் எப்படியிருக்குமோ, அப்படியிருந்தது, எனக்கு. எனினும், தாராவை நான் மணந்துகொள்வது என்ற பிரச்சினை எழாமல் போய் விட்டது.

*            *            *

புத்தரிடம், இந்த, பட்டமரம் சொல்லிவிட்டுப் போன கதையைப்பற்றிக் கூறிடக் கிளம்பினேன்.

'வாழ்க்கை' அலுவலகத்தில் என்றுமில்லாத வழக்கமாக, ஆசிரியர் அம்பலவாணர் வந்திருந்தார். அவரும், புத்தரும் ஏதோ மிகப் பெரிய விவாதம் நடத்திக்கொண்டிருந்தனர். நான் வெளியில் உட்கார்ந்திருந்தேன். ஒரு மணி நேரத்திற்கு மேலாக வெளியில் இருந்தேன். அம்

பலவாணரின் கார் வெளியில் நின்றது. அவரது கார் டிரைவர் **பெரியதம்பி** எல்லோரிடமும் சரளமாகப் பழகக் கூடியவன். என்னிடம் அதிகப் பழக்கம் உண்டு அவனுக்கு. அவன், என்னை 'துட்டு' கேட்பதில் கொஞ்சமும் வெட்கப்படமாட்டான். நான் வெளியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தவுடன் அருகில் வந்தான். எனக்கு என்னமோ, அவனைப் பார்த்ததும், அன்று ஒரு வகையான பரபரப்புணர்ச்சி ஏற்பட்டது. பெரியதம்பியின் மூலம் மிகப் பெரிய உண்மையொன்றை கண்டுபிடிக்க முடியும் என்று எனக்குத் திடீரென ஒரு எண்ணம் மின்னல் போலத் தோன்றியது.

'என்ன பெரியதம்பி, சுகமா?' என்றேன்.

'ஏதோ உங்க மாதிரி நல்லவங்க தயவிலே, சுகத்திற்கு குறைவில்லேங்க--இந்த கை, கால் நல்லாயிருக்கிறவரை, என்னை மாதிரி பாட்டாளிகளுக்கு என்ன குறைச்சலுங்க' என்ருன்.

'ஐயா எப்போ வந்தாங்க?' என்றேன்.

'வந்து, இரண்டுமணி நேரமாச்சு' என்ருன்.

நானும், புத்தரும் சேர்ந்துதான், தங்கம்மாள், மரகதம், அம்பலவாணர்—இந்த முக்கூட்டு முன்னணியில் பெரிய மர்மம் இருக்கிறது என்பதை யூகித்து வைத்திருக்கிருேமே! மேலும், இம்மாதிரி பெரிய மனிதர்களின் கார் டிரைவர்கள் தான், அவர்களின், அகத்துறை டைரி புத்தகங்கள் ஆகவே, அவனைக்கொண்டு ஏதேனும் புலன் விசாரிக்க முடியுமா என்று யோசித்தேன்.

'பெரியதம்பி, ஓய்வாய், வீட்டுப்பக்கம் வாயேன்' என்றேன்.

'அதுக்கென்னங்க, சாயந்திரமே வர்ரேன்' என்ருன்.

இப்போது, அம்பலவாணர் வெளியில் வந்தார். நான் எழுந்து நின்று வணக்கம் தெரிவித்தேன். அவரும் அவசரமாக வணக்கம் தெரிவித்து வெளியில் சென்ருர்—கார் வெகு வேகமாகப் போய்விட்டது.

நான் புத்தரைச் சந்தித்தேன். அவரும் ஏதோ வருத்தமாக இருந்தார் என்றே தெரிந்தது.

'ஆசிரியரிடம் ஏதேனும் வருத்தமா?' என்றேன்.

'இல்லை, குழப்பம்!' என்ருர் அவர்.

'குழப்பமா?' என்றேன்.

'குழப்பத்திற்குமேல், குழப்பம்—புதுக் குழப்பம்' என்ருர் புத்தர்.

'விளங்கும்படிச் சொல்லுங்கள்' என்றேன்.

'நான் எழுதிய தொடர் கதையொன்றை வெளியிட வேண்டாமென்கிருர் அவர்' என்ருர்.

'உங்கள் எழுத்திற்கும் தடைபோடத் துணிந்துவிட்டாரா அவர்' என்ருர்.

'தடை போட்டால், உடனே என் வெளியேற்றம் நடந்திருக்குமே!' என்ருர்.

'பின்......' என்று இழுத்தேன்.

'அவர் கெஞ்சுகிருர் — பயப்படுகிருர் — பரிதாபத்தோடு வேண்டுகிருர்' என்ருர்.

'ஐயோ, அப்படியென்ன, அவர் பயப்படக்கூடிய கதை' என்றேன்.

'எல்லாம் பட்ட மரத்தின் கதைதான்—' என்ருர்.

'அடடா, நான் நேற்றுத்தான் மரகதத்திடம் தாங்கள் பட்டமரம் சொல்லவிட்டுப்போன கதையென்று ஒன்று எழுதப்போவதாகக் கூறினேன்--அது உண்மையாகிவிட்டதே' என்றேன்.

'உண்மையானது மட்டுமல்ல—விபரீதமுமாகி விட்டது' என்ருர் அவர்.

பிறகு அவர், அம்பலவாணர் பயப்பட வேண்டிய தற்குரிய காரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று கூறினர் தங்கம்மாள் படையெடுப்பு—வேலையை விட்டு வெளியேறு கடிதம்---ஆசிரியர் தொடர்கதையை போட வேண்டாம் என்று கூறிடும் விதம்—மரகதத்தின் போக்கு—இவையெல்லாம் எங்கள் இருவருக்குமே விடுவிக்க வேண்டிய புதிர்களாகவே இருந்தன.

'மரகதம் தங்கம்மாள் இருவர் வாழ்விலும், ஆசிரியர் அம்பலவாணர் நிச்சயம் குறுக்கிட்டிருக்க வேண்டும்' என்ருர் புத்தர், அழுத்தந் திருத்தமாக.

'குறுக்கிட்டது மட்டுமல்ல, கெடுத்திருக்கவும் வேண்டும்' என்றேன் நான்.

'அதுதான் துப்பறியும் கதையின் கடைசி வழக்கு மன்ற காட்சி போல புதிய செய்திகளை நமக்குக் காட்டப் போகிறது' என்ருர் அவர்.

'எப்படியோ, இந்த பட்டமரம் துளிர்க்கவேண்டும்' என்றேன்.

'துளிர்க்கிறதோ இல்லையோ — இப்படிப்பட்டுப் போகவேண்டிய நிலை ஏன் ஏற்பட்டது என்று கண்டு பிடித்து நாட்டுக்கு கூறவேண்டும்—இனியாவது பெண்

களும், ஆண்களும், இந்தச் சூழ்நிலைகளில் சிக்காம லிருக்க வேண்டும்' என்ருர் அவர்.

பிறகு இருவரும் புறப்பட்டு, வெகு தொலைவு நடந்துசென்று வீடுவந்து சேர்ந்தோம்.

*   *   *

தாரா திடீரென, என்னைத் தேடிவந்தாள்—அவள் கண்கள் கலங்கியிருந்தன,

'தாரா, ஏன் கண் கலங்கியிருக்கிருய்' என்றேன்,

'கண் கலங்கும் நிலைக்குத் தாங்கள் விட்டுவிட்டீர் கள்' என்ருள்.

'நான?' என்றேன், ஆச்சரியத்தோடு.

'ஆமாம், அக்காதான் கூறுகிருள் — தாங்கள்......' என்ருன்.

'என்ன...... புரியவில்லையே......' என்றேன்.

'மரகதத்தைத் துளிர்க்கவைக்க வேண்டிய நீங்கள், தாராவை ஏன் இப்படி ஒடியவைக்கவேண்டும்' என்ருள். அவளுக்கு அழுகை வந்துவிட்டது.

'அடடா, உன் நல்லமனதை யாரோ பாழாக்கிவிட் டார்கள் — தவருக நினைத்துவிட்டாய் என் உறுதி மொழி — உறவு மொழி — எல்லாவற்றையும் மறந்து விட்டாய்—இத்தனைக்கும் காரணம் உன் அக்காள்தான் என்ருல் உன் அக்காவையே பார்த்துப் பேசுவோம்' என்று கூறினேன்.

பிறகு இருவரும் புறப்பட்டு தங்கம்மாளைத் தேடிச் சென்ருேம். என்ன விந்தை — வேதனை — தங்கம்மா

வின் அறை தாளிடப்பட்டிருந்தது. உள்ளே அவள் இருப்பது போலத் தெரிந்தது. ஆனால் எவ்வளவுதான் கதவு பலமாகத் தட்டப்பட்டும், கதவு திறக்கப்படவில்லை.

தாரா பயந்து விட்டாள்--நானும் பதறிப்போய் கதவை பலமாக உதைத்துத் தள்ளினேன், அது கழன்று கீழே விழுந்தது.

உள்ளே சென்றோம்—உணர்வு கெட்டு நின்றோம். அவ்வளவு அலங்கோலமாக அவள் அறை கிடந்தது. எல்லாவற்றையும் ஒழுங்கு படுத்தினோம்—அவள் மேசையின் மீது ஒரு கடிதம் இருந்தது.

எடுத்தேன்—படித்தேன்—என்ன சொல்வதென்றே புரியவில்லை.

'என் மனம் திருப்தியடையும் நிகழ்ச்சி இன்றே நடந்தது. ஆகவேதான், இன்று இரவே புறப்பட்டுச் செல்கிறேன். இன்னும் ஒரு மாத காலத்திற்கு ஓய்வு பெற்றுச் செல்கிறேன். நான் போனதற்குக் காரணம் நாளை முதல் ஊரார் கூறுவர்—தாரா, உனக்கு மூன்று மாத ஓய்வு முடிந்துவிட்டால் இன்னும் மூன்று மாத ஓய்வு சேர்த்து எடுத்துவிடு; நான் வரும் வரை காத்திரு. ஆனால் ஒரு எச்சரிக்கை—மனோகரன், மனிதரில் மாணிக்கம் - ஒத்துக் கொள்கிறேன்—ஆனால் ஆண் குலத்திற்கே உரிய துரோக புத்தி அவரை விட்டுப் போய்விடும் என்று நம்பாதே! நாய்வாலை நிமிர்த்த முடியுமா? அப்படித்தான் அந்தத் துரோக புத்தியைத் திருத்த முடியாது—எச்சரிக்கை—உடன் திருமணம் செய்துகொள்—என்னைப்போல் கருகிய மலராகிவிடாதே!......' இப்படி சரமாரியாக எழுதியிருந்தது.

'தாரா—உன் தமக்கை என்னைப் புரிந்துகொள்ளவில்லை. புரிந்துகொள்ளாதது மட்டுமல்ல, விபரீதமான எடையும் போட்டிருக்கிறார்கள்' என்றேன் நான்.

'சரி, அக்கா எங்கே போயிருப்பாள்?' என்ருள் தாரா.

'போன இடம் தெரியவில்லை, தேடுவோம்' என்றேன்.

தங்கம்மாள் எங்கே போயிருக்கக்கூடும் என்று யோசித்து, மரகதத்தைச் சந்தித்தால் அவளிடம் ஏதேனும் கூறியிருக்கக்கூடும் என்று எண்ணி புறப்பட்டோம்.

*　　　*　　　*

வீட்டு வாயிலில் பெரியதம்பி காத்துக்கொண்டிருந்தான்.

'என்னங்க, வெளியிலே கிளம்பிட்டீங்க' என்ருன்.

'ஆமாம், வந்து வெகு நேரமாச்சா?' என்றேன்.

'இல்லை, இப்பதான் வந்தேன்' என்ருன்.

'என்ன, எப்படி தொழில்—ஐயா, எப்படியிருக்காங்க?' என்றேன்.

அவன் உடனே மளமளன்னு பேச ஆரம்பித்துவிட்டான்.

'அவரப்பத்தி ஏங்க இப்போ பேசுரீங்க; நேற்று ராத்திரியிலிருந்து, மனிதன் புழுவாய்த் துடிக்கிருரு; ஏன் தெரியுமா? பெரிய விஷயமுங்க—-அவமானமின்னு, தாங்க முடியாத அவமானுங்க—அவங்க சம்சாரமில்லே அந்த அம்மா — அப்படியொண்ணும் மோசமானவங்க இல்லே; அவங்க ஓடிவிட்டாங்க; எங்கபோனுங்கன்னு தெரியவில்லை' என்ருன்.

எனக்கு, தங்கம்மாள் கடிதத்திற்குக் கொஞ்சம் விளக்கம் கிடைத்தது. அவன் மேலும் பேசினான்.

'அவர் இதனை வெளியில் சொல்லவும் முடியவில்லை—சொல்லாமலிருக்கவும் முடியவில்லை—தவிக்கிறார்—நேற்றிலிருந்து வெளியில் கிளம்பவே இல்லை' என்றான்.

நான் அவனுக்கு காபி கொடுத்து, கையில் ஒரு ரூபாயும் கொடுத்து அனுப்பிவிட்டேன்.'

உள்ளே சென்றால், மரகதம், தாராவைக் கட்டிக் கொண்டு அழுது கொண்டிருந்தாள். ஏன் தெரியுமா? ஆசிரியர் அம்பலவாணருக்குத் தாங்கமுடியாத அவமானம் வந்துவிட்டதாம்-அதனால் இவள் அழுகிறாளாம்!

நான் என்றைக்குமே அதட்டிப் பேசியதில்லை—அன்று அதட்டினேன். அழுகையை அடக்கினாள். ஆனாலும், அவளின் துயரம் மாறவில்லை. கள்ளனைத் தேடிப் போகும் பொழுது, வழியிலே, அவன் காலடிகள் தெரிவது போல், தொடர்ந்து நடைபெறும் நிகழ்ச்சிகள் மூலம் பல புதிய உண்மைகள் தெரியலாயின.

'தங்கம்மாள் என்ன சொன்னாள் — எப்போது, எங்கு போயிருக்கிறாள்?' என்றேன்.

'எல்லாம் தங்கம்மாள் வேலைதான்—நான் எவ்வளவோ தடுத்தேன்—கேட்கவில்லை—அதன் பிறகு பேசுவதுகூட இல்லை' என்றாள் மரகதம்.

தாராவின் முகம் வியப்பை அள்ளி அள்ளி வீசிக் கொண்டிருந்தது—அவள் கண்கள் கணத்திற்குக் கணம் ஒரு புது வித பயத்தையும் பதட்டத்தையும் காட்டிக் கொண்டிருந்தன.

'மரகதம், எனக்கும் தாராவுக்கும் திருமணம் நடந்தால் நீ மகிழ்வாய் அல்லவா?' என்றேன், திடீரென, சம்மந்தா, சம்மந்தமின்றி.

மரகதம் திகைத்தாள்—பிறகு தன்னை சமாளித்துக் கொண்டு பேசினள்.

'ஆகா மகிழ்வேன்' என்ருள்.

'அந்தத் திருமணநாள் நெருங்குகிறது. அந்தநாளில் பட்டமரம் துளிர்க்கும்—பசுங்கொடியொன்று மரத்தில் தாவிப்படரும், கருகிய மலர்கூட மலரும்' என்றேன்.

'என்ன' என்று ஆச்சரியத்தோடு கேட்டாள்.

'ஆமாம்—எனக்குப் பலவித உண்மைகள் புலனுகி விட்டன. இனி நேரடியான படையெடுப்பு தான்—இத்தனைக்கும் காரணமானவனைச் சந்தித்து, புயல்குரலில் பேசுவேன். அவன் பதில் கேட்பேன்—அப்பதில் நிச்சயமாக மன்னிப்பு, கழுவாயாகத்தான் இருக்கும்—மரகதம். உன்வாழ்விலே, செழிப்பைத் தேடிவிட்டுத் தான் நான் செழிப்பை நாடிப்போவதென்று உறுதியெடுத்திருந்தேன். அந்த உறுதிமொழி வெற்றி பெறப் போகிறது' என்று கூறினேன்.

மரகதம், கண்களில் நீர் தளும்ப என்னைப்பார்த்தாள். அதில் நன்றியறிதலின் சாயல் நிழலாட்டம் போட்டது. தாராவின் முகத்திலே பெருமையும், பூரிப்பும் கூத்தாடிற்று. எனக்கோ பெரியதோர் சாதனையைசெய்து முடித்துவிட்டது போன்ற திருப்தி—பலநாள்பாடுபட்டுத் தேடிய உண்மையைக் கண்டுபிடித்த விஞ்ஞானியைப் போல — நான் நியூடன் நடை நடந்தேன்!

## நான்

நான் வழக்கம்போல புதிய நாவலுக்குரிய கதா பாத்திரங்களாக மரகதம் மனோகரன், தங்கம்மாள், தாரா, அம்பலவாணர் கார் டிரைவர் பெரியதம்பி, அம் பலவாணர் மனைவி அழகம்மை என்று பலரைத் தெரிந் தெடுத்து, அவர்களது குணவிசித்திரங்களை ஆராய்ந்து குறிப்பெடுத்துக்கொண்டிருந்தேன். குணவிசித்திரங் களை மட்டுமல்ல, சம்பவ மாற்றங்களையும் அணு அணு வாக ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தேன்.

என்னுடைய புதிய நாவலுக்கு அடியெடுத்துக் கொடுத்தது மரம் சொன்ன கதை என்ற உருவகச் சித்திரம்தான். அதையொட்டி, மரகதம் மரம் சொல்ல மறந்த கதை தந்தாள். அதனை ஆசிரியர் அம்பலவாணர் மறுத்தார். இதுதான் நாவலின் உயிரான பகுதியாக்கிக் கொண்டேன். உண்மையைத் தேடினேன்—தேடினேன் தேடிக் கிடைத்தவைகளைச் சேர்த்து உருவாக்கினேன். ஒரு கற்பனைச் சித்திரமாக—பட்டமரம் சொல்லவிட்டுப் போன கதை — என்று தலைப்பிடவில்லை; ஆனால் மனோ கரன் கூறியபிறகு அதையே தலைப்பாக்கி விடுவதுஎன்று முடிவு செய்தேன்.

நிலாவுக்கு, நான் எழுதிய கதைகளை, என் கையெழுத்துப் பிரதியாக இருக்கையிலே படிப்பதுதான் சுவையானது. அப்பொழுது தான் அவளது உரிமை நிலைநாட்டப்பட்டதாக அவள் கருதுவாள்!

கலா, மாலா இருவருக்கும் கதை கேட்பதென்றால், வேறு எதுவும் தேவையில்லை. இதில் மாலா கதைச் சொல்வதிலும் கைகாரி.

இரவு நேரங்களில் அலுவலக வேலைகளை முடித்துக் கொண்டு வீட்டிற்குச் சென்றதும் என் மனப்பளுவுகளை

கொஞ்ச நேரம் இறக்கிவைக்க, இந்த பிஞ்சுமனங்களின் ஆட்டபாட்டங்களையே இடமாக நான் ஆக்கிக்கொள் வேன். மாலாவை கதை சொல்லச் சொல்வேன். அவள் கூறிக்கொண்டேயிருக்கையில் என் நினைவுகள் எங்கேயோ ஓடிக்கொண்டிருக்கும். அவள் மகா சுட்டிப்பெண் — ஆகவே, திடீர் திடீர்என என்கவனம் கதையிலிருக்கிறதா என்பதற்காக குறுக்குக்கேள்விகள் போடுவாள். நான் ஏதேனும் வாயடி, கையடிமூலம், கதை கேட்டுக்கொண் டிருப்பதாகச் சாதித்து விடுவேன் — அது போலவே, 'கேரம்' ஆடினாலும், என்கவனம் காயின்மீது இருக்காது. ஏதோ ஒரு காயை அடிப்பேன் — ஏதோ ஒரு காய் விழும். இப்படி என்மனம் முழுவதும், புதிய நாவலுக்கு, சுவையான தீனி சேகரிப்பதிலே இருந்தது.

ஒருநாள் 'கேரம்' ஆடிக்கொண்டிருந்தோம். திடீ ரென மரகதம் வந்தாள். நிலா எழுந்துபோய் வர வேற்றாள். பிறகு, மரகதம் என்னுடன் பேசவேண்டு மென்பதற்காகவே வந்திருப்பதாக நிலா தெரிவித் தாள்.

'என்னம்மா, சிறப்பான சேதி ஏதேனும் உண்டா?' என்றேன்.

'சேதியல்ல — வேண்டுகோள்' என்றாள்.

'வேண்டுகோளா-என்றால் முடிந்தது எதுவானாலும் செய்கிறேன்' என்றேன்.

'தாங்கள் எழுதப்போகும் தொடர்நாவலுக்கு, ஒரு துண்டு காணிக்கை' என்றாள்.

'என்ன' என்றேன்.

ஒரு காகிதக் கற்றையை நீட்டினாள். பிறகு அவள் போய்விட்டாள். அதனை உடனேயே படித்தேன். என் மனமே, திக்பிரமையில் மூழ்கிக்கிடந்தது. அவள்

என் கதையின் முடிவு அத்தியாயமே தீட்டியிருந்தாள். ஆனால், அது மனோகரன் சொன்ன கற்பனைக்கதையை ஒட்டிமட்டும் எழுதப்பட்டதாக எனக்குந் தெரியவில்லை. என் கதை முழுவதும் படிக்கப்பட்ட பிறகு எழுதப் பட்டதாகவே இருந்தது. நிலா அந்தக் கதையைப் படித்து, அவளுக்குச் சொல்லியிருப்பாளோ என்று கேட்டுப்பார்த்தேன். அவள் இல்லையென்று தலை யசைத்து விட்டாள்.

* * *

மறுநாள் காலையில்தான் அலுவலகத்திற்கு ஆசிரியர் வந்தார்.

வந்தவுடனேயே, அவர் என்னை யழைத்து, என் தொடர்கதையைப்பற்றிக் கேட்டார்.

'புதிய தொடர்கதை எழுதப் போகிறீர்களா?' என்றார்.

'ஆமாம்' என்றேன்.

'என்ன தொடர்கதை' என்றார்

'சமூகத் தொடர்கதை' என்றேன்.

'தலைப்பு?' என்றார்.

'இன்னும் குறிப்பிடவில்லை!' என்றேன்.

'பட்டமரம் சொல்லவிட்டுப் போன கதையென்று போட்டாலும் போடுவீர்கள்' என்றார்.

எனக்கு ஆச்சரியமாகி விட்டது. மனோகரன் கூட, இவர் சந்தித்த பிறகுதான், தான் மரகதத்திடம் பேசிய

விபரங்களைக் கூறினான். ஆனால், இவருக்கு அதற்கு முன்பாகவே விஷயம் தெரிந்து விட்டது! எப்படி? அதுதான் எனது சந்தேகம் – ஆராய்ச்சி!

'தாங்கள் அந்தக் கதையை வெளியிட வேண்டாம்' என்றார் அவர்.

'ஏன்?' என்றேன் சற்றுக் கோபத்தோடு.

'நான் வெளியிடக்கூடாது என்று வேண்டுகிறேன்– கட்டளையிடவில்லை, கெஞ்சிக் கேட்கிறேன் – உத்திரவு போடவில்லை. கதை வெளிவந்தால் என் பழைய வாழ்க்கை நினைவிற்கு வரும். அதனால் மீண்டும் நான் அவதிப்படுவேன்' என்றார்.

'என் கதைக்கும் உங்கள் வாழ்க்கைக்கும் என்ன சம்மந்தம்? நான் என்ன எழுதியிருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமா?' என்றேன்.

'தெரியும் — தெரிந்ததால்தான் சொல்லுகிறேன்' என்றார்.

எனக்கு விந்தையாயிருந்தது. என் கையெழுத்துப் பிரதிக்கு இறக்கைகள் கிடையாது. அது எப்படிப் பறந்து மரகதம் வீட்டிற்கும் அம்பலவாணர் வீட்டிற் கும் போயிருக்க முடியும் என்று யோசித்தேன்.

'சரி, நான் யோசிக்கிறேன்' என்றேன்.

அவர் போய்விட்டார். பிறகுதான் மனோகரன் சந்தித்தான். அவன் கூறியதன் பேரில்தான் பெரிய தம்பி மூலம் ஏதேனும் தகவல் கிடைக்குமா என்று ஆராய முடிவு செய்தேன்.

* * *

எனக்கு மறுநாள் ஒரு தபால் வந்தது. அதில்யார் எழுதியிருந்தார்கள் என்று கூர்ந்து பார்த்தேன். இழே சாரங்கன் என்று கையெழுத்துப் போடப்பட்டிருந்தது; அதிலிருந்த செய்தி இன்னும் பயங்கரமாக இருந்தது.

'அன்புடையீர், வணக்கம். என்னைத் தாங்கள் அறிந்திருப்பீர்கள். மனோகரனோடு ஒருநாள் உங்கள் அலுவலகத்திற்கு வந்தேனே நினைவிலிருக்கிறதா? தங்களைப் போன்றவர்களை தினம் பலர் சந்திப்பர். அவர்களில் என்னை நினைவில் வைத்திருக்கிறீர்களோ, என்னவோ! வேண்டுமானால் மனோகரனைக் கேட்டுப்பாருங்கள்.

நான் அங்கு மனோகரனுக்குத் திருமணம் செய்யும் முயற்சியிலீடுபட வந்தேன். வந்த இடத்திலே பெரியதொரு புயல் ஏற்பட்டது. என் மனதில் — அதற்குக் காரணம் இரண்டு.

ஒன்று மனோகரனும் மரகதமும் காதல் கொண்டு விட்டனரோ என்ற சந்தேகம் — ஏனெனில் மரகதத்தின் நிலையை நான் அறிவேன். காதகன் ஒருவனால் கைவிடப்பட்டு, அதன் பிறகு, தன் வாழ்க்கையே பட்டுவிட்டதாகக் கருதிக் கொண்டிருக்கும் காரிகை. அவளே, மனம் மயங்குகிறாள் என்றால், நான் அவள் மயக்கம் வளர்ந்து மனமாற்றம் ஏற்பட்டால் நல்லதெனவே கருதினேன். மனோகரனை ஓரிருவயது கூடியிருக்ககூடும் என்புருக்கி நோயுடையவள் போன்று தோன்றும். எல்லாம் ஏக்கத்தின் விளைவு — ஏக்கம் விலகினால், அவள் இளமை மீண்டும் புதுவடிவெடுக்கும். ஆகவே, மனோகரன் அவளை மணந்தாலும், ஒரு மங்கையன் வாழ்க்கையை மறுமலர்ச்சியடையச் செய்தான் என்றே பூரிப்புகொள்வேன் — ஆகவேதான், மணப்பெண் வேட்டையை இரண்டாம் நாளே விடுத்துவிட்டேன்.

அடுத்த காரணம், என்னைப்பற்றியது—அந்தசந்திப்பு தான் என்னை உடனேயே ஊருக்கு விரட்டியது — நான் அங்கு ஒரு பெண்ணை சந்தித்தேன். அவளின் சந்திப்பு

தான் என்னை என் வாழ்க்கையின் பாலபருவத்திற்கு விரட்டி யடித்தது. அவள் என் உயிரையே கவர்ந்திருந்தாள். அவளைத்தான் மணப்பதென திடமான முடிவோ டிருந்தேன். ஆனால், அவள் திருமணம் திடீரென நிச்ச யிக்கப்பட்டு, வேறொருவனுக்கு உரிமையாக்கப்பட்டு விட்டாள். எனக்கு அதன் பிறகு வாழ்க்கையே சலிக்க ஆரம்பித்துவிட்டது. பிறகு காலவேகத்தில் பல மாறு தல்கள் - அவள் நினைவு இல்லாமல் போய்விட்டது. கடைசியில் அவளைச் சந்தித்த பிறகு, அவள் வாழ்க்கை சோகத் தொடர்கதையாக இருந்தது. அவள் என்னை அவள் இல்லத்திற்கே கூட்டிச் சென்றாள். அங்கு தன் வாழ்க்கையை, அந்த மாளிகையை வைத்தோ, அவள் அணிந்திருக்கும் நகைகளை வைத்தோ, ஊர்ந்து வந்த காரைவைத்தோ கணக்கிடக் கூடாது என்று வேண்டினாள். அவள் மனதை வைத்தே வாழ்க்கையை அளக்கவேண்டும் என்று மன்றாடினாள். அவள் ஒரு பெரிய மனிதருக்கு' வாழ்க்கைப்பட்டிருந்தாள். ஆனால் வாழ்க்கையோ, ஒரு சிறிய மகிழ்ச்சிக்கும் இடமில்லாம லிருந்தது.

அவர் கணவன் வீட்டிற்கு வருவதே, என்றோ ஒரு நாள் — தனியான ஒரு மாளிகை — அதில்தான் எப்போ தும் தங்கியிருப்பான். அங்கே கோலாகலங்கள் நடை பெறுமாம். அந்த மாளிகைக்குப் பெயர் என்ன தெரி யுமா? காந்திபவன்!

அவள், இந்த இடத்திலிருந்து ஓடிவிடப் போவதா கவே கூறினாள். நான் பயந்தேன்—சரியல்ல என்று கூடக் கூறினேன். அவள் என்னை கோழையென்று திட்டினாள், ஏமாந்த சோணகிரியென்று ஏளனம் பேசி னாள். கடைசியில் இன்னும் மூன்று மாதத்தில் இந்த இடத்தை விட்டுப் போக வேண்டும் அல்லது, இந்த உலகை விட்டே போக வேண்டும் என்று கூறினாள். நான் யோசித்தேன்—சரி நான் ஊர் போய் ஏற்பாடு செய்கிறேன்—என்றேன்.

அதன் பிறகு ஊருக்கு வந்தேன். என் புறப்பாடு அவ்வளவு விரைவில் இருக்கும் என்று யாரும் கருதி

யிருக்க மாட்டார்கள். அவ்வளவு திடீரென புறப்பட்டேன். வந்து அவளை அழைத்துக்கொண்டால் வழக்கு போட்டு, சிறையில் தள்ளினால் என்ன செய்வது என்று யோசித்தேன். எங்கேயாவது வெளிநாடு போய்விடலாமா என்று யோசித்தேன்.

என்ன ஆச்சரியம்–இப்படி யோசனையிலாழ்ந்திருக்கையில், ஒரு இரவு இரண்டு பெண்கள் என்னைத் தேடி வந்து விட்டார்கள்–எனக்கு இப்போது என்ன செய்வதென்றே புரியவில்லை!

இதுபற்றி உங்களுக்கு ஏன் எழுதுகிறேன் என்றால், தங்களுக்கு மிகவும் நெருங்கிய இடத்தைச் சேர்ந்த பெண் அவள்-ஆச்சரியப் படாதீர்கள்! அவள், உங்கள் ஆசிரியர் அம்பலவாணரின் மனைவி அழகம்மைதான்.

தாங்கள் அம்பலவாணரிடம் இதுபற்றிக் கூற வேண்டாம் - நீங்களே புறப்பட்டு வந்தால்கூட நலம்

அன்பன்,

**சாரங்கன்.**

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்துவிட்டு திகைத்துப் போயிருந்தேன். அப்போது மனோகரனும், அவன் காதலி தாராவும் வந்தனர்.

அவர்கள் சொன்ன விஷயம் இன்னும் விபரீதமாக இருந்தது.

தாரா, தன் தமக்கை தங்கம்மாள், யாரிடமும் கூறாமல் இரவோடு இரவாகப் போய்விட்டாள் என்று கூறினாள்.

பெரியதம்பி கூறிய செய்தியாக, அழகம்மை காணமற் போனதைப் பற்றிக் கூறினான் மனோகரன்.

பிறகு, நாங்கள் மூவரும், மேற்கொண்டு என்ன செய்வது என்று யோசித்தோம். சாரங்கன் கடிதத்தைப் பற்றி எந்தத் தகவலும் தரவில்லை. மரகதத்தை முதலில் சந்திப்போம் என மூவரும் புறப்பட்டோம். அவர் பள்ளிக்கு அன்று வரவில்லையென்றுர்கள். சரி, வீட்டிற்குப் போய்ப் பார்ப்போம் என்று வீட்டிற்குச் சென்றோம். நான், என் வீட்டிற்குப்போய் என் நிலாவிடம், மரகதத்தைப் பார்த்துப் பேசிவிட்டு வருவதாகக் கூறி விட்டு, பக்கத்து வீட்டிற்குச் சென்றேன்.

அங்கே, தாராவும் மனோகரனும் திருதிருவென விழித்தனர். சமையற்காரியை விசாரித்தால், பள்ளிக் கூடம் போவதாகவே கூறிவிட்டுச்சென்றதாகக் கூறினுள். ஐயோ, இவளும் எங்கே மறைந்துவிட்டாள் என்பது தெரியவில்லை பிறகு என்ன செய்வது என்று மூவருக்குமே புரியவில்லை! அன்று முழுவதும் தேடிப்பார்ப்பது என்று முடிவு செய்தோம்.

* * *

ஒரு நாளில் எத்தனை விசித்திரமான நிகழ்ச்சிகள் நடைபெற முடியுமோ, அவ்வளவு விசித்திரமான நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன அன்று! எனக்கே அதற்கு காரணம் புரியவில்லை! தாராவையும், மனோகரனையும் விட்டுப் பிரிந்து வீடுசென்ற பத்து நிமிடங்களில் கார் வந்து வெளியில் நின்றது. பெரியதம்பி உள்ளே வந்தான்.

'ஐயா, உங்களை கூட்டிவரச் சொன்னுங்க' என்றுன்.

'எங்கே இருக்கிறுர்?' என்றேன்.

'காந்தி பவனத்தில்!' என்றுன்.

'வேறு யாரும் அங்கே இல்லையா?' என்றேன்.

'தனிமையாகத்தானிருக்கிருரு' என்றுன்.

நான், கழற்றிய சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு, நிலாவிடம், இன்னும் சிறிது நேரத்தில் திரும்பி வருவதாகக் கூறிப் புறப்பட்டேன். காரில் ஏறிக் கொண்டேன். இரண்டொரு நிமிடங்களில் காந்தி பவனத்தை அடைந்துவிட்டோம்.

நான் இறங்கி உள்ளே சென்றேன். ஆசிரியர் அம் பலவாணர் சிலைபோல அமர்ந்திருந்தார். என்னைக் கண் டதும் உதட்டசைவால் வரவேற்றார்.

'புத்தரே, நான் தங்கள் நாவலின் வெளியீட்டால் விபரீதங்கள் வெளியாகும் என்று எண்ணினேன். ஆனால் அவை, இன்று மிகவும் திடுக்கிடக் கூடிய திருப்பங் களுக்கே போய்விட்டன' என்றார் அவர்.

'புரியும்படிப் பேசுங்கள்-என்னிடம் பேசும் ஒவ் வொரு சந்தர்ப்பத்திலும் குறிப்பாகப் பேசுகிறீர்கள்- என்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை' என்றேன்.

அவர் நீண்ட நேரம் பேசினார்.

இன்று உங்களுக்கு விளங்கும்படிக் கூறுவதற்காக அழைத்திருக்கிறேன்-என் மனக்குழியில் மறைத்துவைத்த மனக் குமுறல்களை இன்று வெளியிடவே தனிமையாகத் தங்களை அழைத்துவரச் சொன்னேன். புத்தரே, நான் இந்த நிலைக்கு வந்ததற்குரிய காரண, காரியங்களை விளக் கப் போவதில்லை. அது சர்வ சாதாரணமான விஷயம் - ஆனால் என் வாழ்க்கையின் வெளிப்புறத்தை அலட்சி யமாக விடலாமே தவிர, என் உள்புறத்தை அப்படி விடுவதிற்கில்லை.

நண்பரே, நான் உண்மையில் கூறப்போனால் ஒரு பட்டமரம் - நான் கூறுவதைக் கேட்டால் நீங்கள் வியப் படைவீர்கள். பட்டமரம் பெண் குலத்திலிருப்பதாகவே நீங்கள் தவறுதலாகக் கணக்குப் போட்டு வைத்திருக்

கிறீர்கள். என்னால் இரண்டு பெண்கள் வாழ்வுப்பட்டுப் போயிருப்பதாகத் தாங்கள் யூகித்திருப்பீர்கள். அவர்களால் என்வாழ்வு பட்டுப்போனவிதத்தை உணரமுடியாது, உங்களால்!

பெண்கள் தொட்டால் கெட்டுப்போகும் இனிப்புப் பண்டம். ஆண்களோ, தொடாமலேயே, கெட்டுப் போகும் காரப்பண்டம். இதனை வாழ்க்கையில் அனுபவத்தின் மூலம் அறிந்து கொண்டவர்கள், என்மீது ஆத்திரப்படமாட்டார்கள், அனுதாபப்படுவார்கள்.

நீங்கள் யூகிப்பது போல, மரகதத்தின் வாழ்க்கை பட்டது என்றால் என்றே வைத்துக்கொள்ளுங்கள். அதுபோலவே, தங்கம்மாளின் வாழ்வும் கருகி விட்டதற்கும் நான் காரணமென்றே வைத்துக்கொள்ளுங்கள். ஆனால், இவர்கள் வாழ்வு பட்டுப்போய் விட்டது போல்வே, என்வாழ்வும் பட்டுப் போயிருக்கிறது, என்பதை அவர்கள் உணரவேண்டும்.

எனக்கு பள்ளிப்பருவத்திலிருந்து, அறிமுகமானவள் மரகதம் - அவள் என் வகுப்பிலேயே படித்துவந்தவள். அவளிடம் முதலில் பேசவேண்டிய வாய்ப்பு ஏற்பட்டதற்குக் காரணமே மிகவேடிக்கையானது. நான் பள்ளிக்கூட இலக்கியக் கழகத்தின் செயலாளன். ஒரு நாள் ஒரு பொருள் பலருரைக்கு வழங்கும் கூட்டம் ஒன்று ஏற்பாடு செய்திருந்தேன். அதில் ஒருபெண் பேச்சாளர் இருப்பது நல்லதென எண்ணி, மரகதத்தைப் பேசும்படிக் கேட்டேன்; அவளும் சம்மதித்தாள். சம்மதித்தாளே ஒழிய, அன்று பேசுவதற்கு வேண்டிய பேச்சினை என்னையே எழுதித்தரும்படி வேண்டிக் கேட்டுக் கொண்டாள். ஒரு பெண்ணுக்கு அத்தகைய உதவி செய்வதிலே எனக்குப் பெருமையும், பூரிப்பும் இல்லாமல் இருக்குமா? அதிலிருந்து தான் மரகதத்திடம் எனக்குப் பழக்கம் தொடங்கியது.

நான் பள்ளிப் பருவத்திலிருந்து, எழுதுவதிலும், பேசுவதிலும் அதிக ஆர்வம் செலுத்தி வந்தவன். பள்ளிககூடத்தில் கட்டுரை தீட்டுவதிலும், பேசுவதிலும் வல்லவன் நான். ஆண்டு தோறும் வெளியிடும் பள்ளி சஞ்சிகையைத் திரட்டி உருவாக்கும் பொறுப்பில் கூட நானே இருந்து வந்தேன். அதிலும், நான் மரகதத்தின் பெயரால் ஒரு கட்டுரை தீட்டி வெளியிட்டேன். மரகதத்திற்கு அதிலே ஆனந்தம்.

இப்படி பள்ளியில் எழுத்து தானமாக இருந்த எங்கள் நட்பு, கல்லூரியில் போய், எல்லோர் வாழ்விலும் வருவது போல், காதல் தானமாக மாறியது.

கல்லூரியில், மரகதமும், நானும் ஒரு வகுப்பில் படிக்கவில்லை. அவள் கணிதம் எடுத்திருந்தாள். நான் விஞ்ஞான மாணவனுக சேர்ந்தேன். எனக்குப் படிப்பிலே நாட்டமில்லை. நாட்டம் எப்படி யிருக்கமுடியும்?

நான் காதல் ஆராய்ச்சியிலீடுபட ஆரம்பித்து விட்டேன். அதாவது ஷேக்ஸ்பியரிலிருந்து அண்ணு வரையில் உள்ள உலகப்பெரும் எழுத்தாளர்களின் இலக்கியங்களில் காதலைப்பற்றி என்ன எழுதியிருக்கிறது என்று தேடும் வேலையே எனக்குச் சரியாக இருந்தது. பல இரவுகள் விழித்திருப்பேன் – விடிய விடியப் படிப்பேன். விடிந்த பிறகு இட்டிலியும், காபியும் அருந்திவிட்டுத் தூங்குவேன். என்ன அப்படிப் படிப்பேன் என்று கேட்டீர்களானுல், நான் மரகதத்துக்கு எழுதும் கடிதங்களைத் தான் இரவு முழுவதும் திருப்பித் திருப்பிப் படிப்பேன் – திருத்தி எழுதுவேன்– இந்த நிலையில் கல்லூரிப் படிப்பு எப்படி எனக்குவரும்?

மரகதமும் இதே நிலையில் தான் பொழுதைக் கழித்திருக்கவேண்டும்! இல்லாவிட்டால் இருவருமே, கல்லூரி முதலாண்டிலேயே தவறியிருக்கமாட்டோம்!

# பட்ட மரம்

அவளைக்கல்லூரியில் சந்தித்த நான், காலப்போக்கில் வெளியிலும் சந்திக்க ஆரம்பித்தேன். பிறகு அவள் வீட்டிற்கும் போக ஆரம்பித்தேன். அவள் வீட்டில், அவளின் தாயார் மட்டுமே இருந்தாள். அவளின் பெரிய அண்ணன், அவர் மனைவி, மக்களும் உடன் இருந்தனர். அவளின் சிறிய அண்ணன் இந்தோ சீனத்தில் ஒரு கம்பெனியில் வேலையில் அமர்ந்திருந்தார். அவர் தான் மரகதத்தை படிக்க வைக்க பணம் அனுப்பி வந்தார். அந்த சகோதரன் மீது தான் மரகதத்திற்கு அதிக பிரியம் - அவர்கள் குடும்பம் நன்ருகப் படித்தவர்கள் குடும்பம் - ஆகவே, பெண்களுக்கு அதிக சுதந்திரம் உண்டு. நான் மரகதத்தைத் தேடிச் செல்வதினுல், அவள் வீட்டாருக்கு எந்தவித சந்தேகமோ, அதிருப்தியோ கிடையாது. ஆனுல், அவளின் தாயார் மட்டும் முகத்தைச் சுளிப்பாள். ஆனுல் அதைப் பொருட்படுத்துவதில்லை.

சிலஇரவுகளில் திருட்டுத்தனமாக அவள்வீட்டிற்குச் சென்றிருக்கிறேன். ஒருவருக்கும் தெரியாமல், அவள் வீட்டை யொட்டியுள்ள விநாயகர் கோவிலின் இருண்ட பிரகாரத்தில் சந்தித்து இரவு முழுவதும் காதல்மொழிப் பேசிக்கிடந்திருக்கிருேம்.

நான் வெளிப்படையாகச் சொல்கிறேன் - அப்பொழுதே சகல வகையிலும், கலந்துறவாட ஆரம்பித்து விட்டோம்—அதுதான் தவறு என்று இப்போது கருதுகிறேன். காதலைப்பற்றி அப்போது போட்டுவைத்திருந்த கணக்கு தவறு. அது ஒரு பெரிய மாளிகையென்று கருதினேன். ஆனுல், அது மாளிகையின் முதல் வாசற்படி தான் என்பது பின்னுல் புரிந்துகொண்டேன். மரகதம், காதலை, மாளிகையென்று மட்டும் நினைக்கவில்லை. மாளிகை முழுவதும் நிறைந்திருக்கும் ஒரு மாயக்காற்று என்று கருதினுள். ஆனுல் அது மாளிகையில் நுழையும்போது வந்துவீசும் இளங்காற்று என்று புரிந்துகொள்ளவில்லை. இந்த வாழ்க்

கைத் தத்துவங்களைப் புரிந்துகொள்ளாததாலே, எங்கள் வாழ்க்கையே பட்டுப்போயிற்று.

கல்லூரிப் படிப்பை, அவள் தொடர்ந்து முடிக்க முழுமூச்சாக ஈடுபட்டாள். என்னையும் வற்புறுத்தினாள். ஆனால் நான் காதல் கல்லூரியில் நிமிடத்திற்கு நிமிடம் முன்னேறி வந்தேனே தவிர, வெறும் கல்லூரிப் படிப்பில் பிடிப்பில்லை. மரகதமோ என்னை படிப்பில் நாட்டம் செலுத்தச் சொன்னாள். என்னால் அதில் நாட்டம் செலுத்த முடியவில்லை. ஆகவே, 'இண்டரை' தாண்டாமலே, என் படிப்பு முடிந்தது. அவள் 'இண்டருக்குப்' பிறகு ஒரு கிருத்துவ கல்லூரியில் சேர்ந்தாள். அங்கே, நான் வேலைதேடி, ஒரு கம்பெனியில் நாற்பது ரூபாய் சம்பளத்தில் அமர்ந்தேன். இது எனக்கு மெத்த மகிழ்ச்சியாக இருந்தது. ஞாயிறுதோறும் மரகதத்தைச் சந்திப்பேன்.

இந்தக் காலத்தில் நான் எழுதிக்குவித்த கடிதங்கள் இருக்கின்றனவே, அவைகள் ஒவ்வொன்றும், பெரியதொரு இலக்கியச் செல்வங்களாகத் திகழக்கூடியன. ஏனெனில், இலக்கியங்கள், உணர்ச்சிகளின் தொகுப்புகளாக இருந்தால்தானே, உண்மை இலக்கியங்களாக முடியும்!

மரகதம், அடிக்கடி திருமணம்பற்றிப் பேசுவாள். நானும் அதற்குத் தயார்தான். ஆனால், அவள் என்னை, அவளை வைத்துக் காப்பாற்றும் அளவு பொருள் வருவாயுடையவனாக மாறும்படி வற்புறுத்தினாள். அந்த சந்தேகம் வந்ததற்குக் காரணமே, எனது முட்டாள் தனந்தான்—நான் அவளிடம் அடிக்கடி பணவுதவியை எதிர்பார்த்தேன். நான் ஏழையல்ல — ஆனால், என் தகப்பனாரின் எதிர்ப்பிலே, இந்தக் காதல் வாழ்க்கை நடைபெறவேண்டியதால்தான் பொருள் கட்டுப்பாடு எனக்கு ஏற்பட்டது.

குடும்பத்தை எதிர்த்து, இருவருமே காதல் வாழ்க்கை நடத்தவேண்டுமென்ருல், பொருள்வேண்டும். அதனுல் தான் நான் பொருள் தேடும் வேலையில் ஈடு பட்டேன். அதில் தோல்வி காணும் ஒவ்வொரு நேரத் திலும், அவளின் துணை தேடினேன். அவளும் பணம், பணமாகத் தந்தாள். ஆனுல், ஒவ்வொரு பத்து ரூபாய் தரும் பொழுதும், என்னைப்பற்றி பத்து மாற்று குறை வாக எடை போட்டு வந்திருக்க வேண்டுமென்று கருதி னேன்.

இந்த நிலையில், என் தாய்க்கும், தந்தைக்கும் என் காதல் கதை தெரிந்து விட்டது. ஆகவே என்னை ஊருக்கு வரச்சொல்லி விட்டார்கள். ஊருக்குச் சென்ற ஒரு திங்களுக்குள் எனக்குத் திருமணம் செய்யப் போவ தாகக் கூறினுர்கள். நான் என் தந்தையிடம் எதையும் துணிந்து சொல்லமாட்டேன். தாயிடம் சொல்லி விடு வேன். என் முடிவைக் கேட்டதும் தாய் திடுக்கிட்டுப் போய்விட்டாள். அவள் அழுதாள் - கெஞ்சினுள். நான் மரகதத்தைத் தவிர வேறு யாரையும் மணக்க மாட்டேன் என்று பிடிவாதமாகக் கூறிவிட்டேன். ஆனுல் பிடிவாதம் பொடிப் பொடியாகும் வகையில் என் தாயின் பிடிவாதம் வளர்ந்தது.

ஒருநாள் என்னை என் தாயார் அழைத்தார்.

'தம்பி, முடிவாகச் சொல்லிவிட்டேன் உன் பிடி வாதத்தை விட்டு விட்டு, அப்பா பார்க்கும் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டால் உன்தாயை உயிருடன் பார்க்கலாம்-இல்லாவிடில், தோட்டத்து புளியமரத்தில் உன் தாயின் பிணம் தொங்கும். மூன்று நாட்களில் முடிவு தெரிய வேண்டும்' என்ருர்.

என்ருல் என் காதுகளை நம்பமுடியவில்லை.

'அம்மா, அவசரப்பட்டு எதும் செய்துவிடாதீர்கள். நான் முயற்சிக்கிறேன்—முடியுமா என்று பார்க்கிறேன்' என்றேன்.

'முடியுமா, முடியாதா என்பதெல்லாம் வீண்பேச்சு — உன் மணம், எங்கள் விருப்பப்படி — இல்லாவிட்டால் என் பிணம் — இரண்டிலொன்று முடிவாக வேண்டும்' என்றார்.

அப்போழுது தான் பெண்ணின் உறுதியைக் கண்டேன்.

மரகதத்தைக் கண்டுபேச முடிவு செய்தேன். அவளைக் கண்டு பேசிவிட்டு, பிறகு பதில் கூறலாம் என்று எண்ணினேன்.

'அம்மா, எனக்கு ஒருவாரம் யோசிக்க நேரம் தாருங்கள். அதற்குள் என் மனதை மாற்றிக்கொள்கிறேன்' என்றேன்.

பிறகு தான் என் தாயை பழைய நிலையில் பார்த்தேன். அதுவரை, என் தாயைப் பார்க்கவே பயமாக இருந்தது. நேருக்கு நேர் நின்று பேசும் தைரியம்கூட எனக்கு இல்லாமல் போய் விட்டது.

இத்தனைக் கூத்தும் என் தந்தைக்குத் தெரியாது. அவர், எனக்கு அழகம்மை என்ற பெண்ணை முடிவு செய்து வந்து விட்டார். அழகம்மை, தூரத்து உறவு— அவள் தந்தை ஒருபெரிய சீமான்—பல இலட்சங்களுக்கு அதிபதி. அவர் ஒருஇலட்சம் ரூபாயுடன், அழகம்மையை எனக்குத்தர ஒப்பிவிட்டார்.

அழகம்மையை அடையா விட்டால், தாய் பிணம்— தந்தையின் கோபம் — குடும்பத்திற்கு அவமானம். மரகதத்தை அடையா விட்டால் பெண்ணுக்குப் பெருந்

துரோகம் — காதலுக்கு இழுக்கு — ஒரு பெண்ணின் வாழ்க்கையே பாழ் — இந்நிலையில் நான் தவித்தேன்.

தந்தையிடம் ஓராண்டு திருமணத்தைத் தள்ளி வைக்கும்படி வேண்டினேன் — அவர் கடைசியாக ஒப்பினார். இதற்குள் நிலைமை மாறும் என்று எதிர்பார்த்தேன்.

மரகதத்திடம் நிலைமை முழுவதும் கூறினேன். அவள் எனக்கு வழிசொல்லவில்லை. பழி சுமத்தினாள் — பணத்திற்காக நான் மாறிவிட்டேன் என்றாள் — திட்டினாள் — குறை கூறினாள். நான் அவளைச் சமாதானப் படுத்தமுடியவில்லை. அவள் ஓட ஓட விரட்டினாள். நான் அடங்கினேன் — ஒடுங்கினேன் — அவள் அப்போதும் தன் போக்கை மாற்றிக்கொள்ளவில்லை.

அவள் என்னைத் திருத்த அதனை முறையாகக் கருதினாளோ, என்னவோ, அறியேன். அந்தக் கடுந்தாக்கு தலையே, அவளை வெறுக்கப் பயன்படுத்தும் கருவியாக்கிக்கொண்டேன். காதல் புரியும் ஆணும், பெண்ணும் அறிந்திருக்கவேண்டிய உண்மையொன்றுண்டு. காதல் உண்மையில் விட்டுப்போகாமலிருக்க வேண்டுமானால், முதலில், திருமணம் முடியும்வரை, எதற்கு இடங்கொடுத்தாலும், சதைத் தொடர்புக்கு இடந்தரவே கூடாது! ஆம், விஞ்ஞானத்தில் கவர்ச்சி முறை (gravitation) என்றொரு பாடம் உண்டு. அதற்கு இந்த ஆண் — பெண் பாடத்திலும் இடம் உண்டு. பூமியும், சந்திரனும், வேறு கிரணங்களும் அதனதன் இடத்தில், இருந்தபடி இருப்பதற்குக் காரணம் ஒன்றையொன்று அவை இழுத்துக்கொண்டிருக்கின்றன. அதனால்தான் அவை இடம் பெயராமலும் மாறாமலும், அதனதன் இடத்திலும் இருக்கின்றன. அதுபோலத்தான், ஆணும் பெண்ணும், இந்தக் கவர்ச்சிக்கு அதிக பாதுகாப்புத்தர வேண்டும்.

நியூடன், ஆப்பிள் மரத்தடியிலிருந்து இந்த ஆராய்ச்சியை செய்தானும்; அதுபோல, நான் அனுபவ மரத்தினடியிலிருந்து இந்த ஆராய்ச்சி செய்தேன். நியூடன் மரத்திலிருந்து இற்றுவிழும் பழம் எப்படி, பூமிக்கு வருகிறது என்று யோசித்தான். நான், உலகில் இரட்டை இரட்டையாக ஆணும், பெண்ணும், வாழ்விலும், தாழ்விலும் இணைந்தே எப்படி இருக்கிறூர்கள் என்று ஆராய்ந்தேன். இந்த ஆராய்ச்சி தந்த விளக்கம்தான், இந்த பாடம். கவர்ச்சி முறையில் கவனம் வேண்டும். காதல் வாழ்விலேயே, சதைத் தொடர்பு ஏற்பட்டுவிடுவதால் கவர்ச்சி குறைகிறது – அதனுலே, திருமணம் நடைபெறுமலே போகிறது மரகதத்திற்கு இந்தப் பாடம் தெரியவில்லை. அதனுல்தான் நான் சலிக்க சலிக்க இடம் தந்தாள். இன்று மனதை மாற்றும் அளவு, காதல் கவர்ச்சி குறைந்துவிட்டது.

வாழ்க்கையைப்பற்றி, எதையெதையோ கூறுவார்கள். நான் சுருக்கமாகச் சொல்வேன் – இந்தக் கவர்ச்சி வித்தைதான் வாழ்க்கை. இதற்கு தமிழர் தந்துள்ள பெயர் கற்பு. கற்பு கெடாமல் இருக்க வேண்டுமானுல், இந்தக் கவர்ச்சி குறையாமல் இருக்கவேண்டும் என்பதுதான். அதனுல்தான் அதற்கு அவ்வளவு காவல், கட்டுப்பாடு வைத்திருக்கிறூர்கள்.

கற்பு கெட்டவள் என்றுல், கவர்ச்சி முறையை, கண்டபடி பயன்படுத்திக் கெடுத்துக்கொண்ட காரிகை யென்பதே, அதன் நிர்வாண அர்த்தம்.

மரகதத்தை விட்டு விலகிய நான், அத்தோடு நின்று விடவில்லை. அதன்பிறகு, மரகதம் படித்துவந்த கிருத்துவக் கல்லூரியின் ஆசிரியை ஒருவளோடு உறவு கொண்டேன். அவள் மூலம் கிடைத்த பேரின்பம்தான் தங்கம்மாள். அந்த ஆசிரியை என் வயதைவிட அதிக வயது பெற்றவள். என்னைக்கவர, தங்கம்மாளின் தொடர்பை, 'கிம்பளமாகக்' கொடுத்தாள். காதல் வாழ்க்கையையே கசக்கும் வாழ்க்கையாக மாற்றிக்

கொண்ட நான், தங்கம்மாளையும் சில நாட்கள் சுகித்தேன். அவளோ என்னையே தன் வாழ்வாகக் கொண்டாள். நானோ அவளை என் வாழ்க்கையின் ஒரு சிறு பகுதியாகவே கருதினேன். அவள் என்னை வாழ்க்கைப் புத்தகமாக எண்ணினாள். நான் அவளை, வாழ்க்கைப் புத்தகத்தில் வரும் 'கமா' கோலனாகவே கருதினேன்.

ஓராண்டும் முடிந்தது. தந்தை, தாயார் விருப்பப்படி, அழகம்மை - அம்பலவாணன் திருமணம் நடந்தது. இலட்சத்தோடு வந்தாள் அவள். ஆகவே, நான் 'வாழ்க்கை'ப் பத்திரிகையை துவங்க முடிந்தது. ஊர்ப் பிரமுகர்களில் ஒருவனாக முடிந்தது. பல பதவிகள் வகிக்க முடிந்தது. ஆனால், என் அகவாழ்க்கையில் நான் இலட்சாதிபதியாக இல்லை. பிச்சாதிபதியாகவே இருந்தேன்.

புத்தரே, நான் பட்டமரம்தான் — என் இளமை, இன்பம் எல்லாம், வெம்பிப்போன மரம் பிஞ்சாகவே முடிந்துவிட்டது. ஆகவே, பட்டுப்போன மாமரம் போல் நான் இருக்கிறேன். இதிலிருந்து மாங்கனிகளை, அழகம்மை எதிர்பார்த்தாளோ, என்னவோ — அவள் வாழ்வும் பாழாகிவிட்டது!

ஆனால், நான் என் வாழ்க்கைப் பாடங்களைத் தலைகீழாகப் படித்து, இப்போது, திருப்தி தேடுகிறேன். காந்தி – பவனம், இன்று அந்த கைங்கரியத்திற்கே பயன்படுகிறது.

புத்தரே — இந்த நிலையில்தான், நான் மீண்டும். பள்ளியாசிரியையாக, மரகதத்தைச் சந்தித்தேன்; தலைமையாசிரியையாக தங்கம்மாளை சந்தித்தேன். அவர்கள் மூலம் பெண்மையினை முழுவதும் அறிந்து கொண்டேன்.

பெண்மை, நிலவின் தண்மையையும், கதிரவனின் வெம்மையையும் கொண்ட ஒரு விசித்திரம். இதனை நான்

முழுக்க முழுக்க இப்போது உணர்கிறேன். மரகதம் மூலம், நிலவைக் காண்கிறேன். தங்கம்மாள் மூலம், கதிரவனைப் பார்க்கிறேன்.

மரகதம் என் பெயரைக்கூட வெளியில் கூறவில்லை இந்நாள்வரை-ஆனால், தங்கமோ என்னைப் பழிக்குப்பழி வாங்குவது என்று முடிவெடுத்து, அதற்கு திட்டம் தீட்டி, இப்போது பழிக்குப்பழி வாங்கிவிட்டாள்.

இவ்வூர் பெண்கள் சங்கத்திற்குத் தலைவி என் மனைவி அழகம்மை-அதற்கு செயலாளர் தங்கம்மாள். தங்கம், அழகம்மை உள்ளத்திலே நஞ்சைப் புகுத்தி விட்டாள் என்றே கருதுகிறேன். அவள் இன்று எங்கோ, எவனுடனோ ஓடிவிட்டாள். இதன் மூலம் எனக்கு அவமானத்தைத் தேடிவிட்டாள் தங்கம்மாள்.

இதனால் தங்கமாளுக்கு ஏற்பட்ட மனப்புண் ஆறினால் சரி-எனக்குப் பெரிய மனச்சுமை ஏற்படுத்தி விட்டதாகக் கருதினால், அதில் அவள் ஏமாந்து விட்டாள் என்றே கருதுகிறேன்-என் அகவாழ்க்கை பட்டுப் போனது மட்டுமல்ல, என் மனமும் மரத்துப் போயிருக்கிறது-என் உணர்ச்சி குன்றிப் போயிருக்கிறது. நான் வெறுப்போடுதான் உலகத்தை-அதுவும் பெண்ணுலகத்தைப் பார்க்கிறேன்-மேலும் பெண்களே, இன்று எனக்கு வேடிக்கை பொம்மையாகவே தெரிகின்றனர்-என்னை எப்படி வேண்டுமானாலும் கருதுங்கள். எனது மறைந்த கால வாழ்க்கையை நினைவுபடுத்தி, பழைய பித்தனாக மாற்ற வேண்டாம் என்பதற்காக, தங்கள் நாவலை வெளியிட வேண்டாமென்று கேட்டுக் கொண்டேன்-நிச்சயமாக என்னைப்பற்றி எழுதப்பட்ட நாவல் என்பது எனக்குத் தெளிவாகத் தெரியும்.

அழகம்மை, செய்தது எனக்கு அவமானமான காரியமானாலும், அவளுக்கு சிலாக்கியமான காரியமில்லையென்பதாலே வருந்துகிறேன்.........

இப்படி அவர் நீண்டநேரம் பேசினர்.

நான் அவருக்கு என்ன பதில் கூறுவதென்றே தெரியாமல் தவித்தேன்.

'தாங்கள், வெறுப்பில், வேதனையில் இப்படிப் பேசுகிறீர்கள் – அழகம்மையைத் தேடிச் சேர்ப்பது என் பொறுப்பு–அவள் எங்கு சென்றிருக்கிருள்–எந்நிலையில் இருக்கிருள் என்பது எனக்கு எளிதில் தெரிந்துகொள்ள முடியும்' என்றேன்.

'தேடிச்சேர்ப்பது அல்ல குடும்பம் — ஓடிப்போவதுமல்ல வாழ்க்கை—ஒன்றையொன்று தேர்ந்தெடுத்துக் கூடியிருப்பதே இல்லறம்' என்ருர் அவர்.

'இரும்பை உருக்க நெருப்பாலே முடியும் — அதுபோல, ஒரு பெண்ணின் மனதை உருக்க, வேருெரு பெண்ணின் மனத்திற்கே முடியும்' என்றேன்.

'புத்தரே, என் மனதில் அரித்துக்கொண்டிருந்த விஷயத்தை வெளியிட்டுவிட்டேன் — இனி இதுபற்றி முடிவிற்கு வரவேண்டியவர் நீர் — நீர் எதைவேண்டுமானுலும் செய்யலாம்—என் 'வாழ்க்கை' அலுவலகத்தில் மட்டும் துணையாசிரியரல்ல—வாழ்விலும் துணையாசிரியர் என்றே கருதுகிறேன்' என்ருர்.

மறுநாள் வந்து சந்திப்பதாகக் கூறிப் புறப்பட்டேன்.

* * *

வீடுவந்து சேர்ந்ததும், வேருெரு புதுமை என்னை வரவேற்றது.

மரகதம் வீட்டில் ஏகக்கூட்டம், என்னவென்று விசாரித்தேன். யாராரோ, வந்திருக்கிருர்கள் என்ருள் நிலா.

நான் மரகதம் வீட்டிற்குச் சென்றேன்.

மனேகரன் வரவேற்ருன் — மரகதமும் வரவேற்ருள்.

மற்றவர்களைப் பார்த்தவுடனே வியப்பே என்னை எடுத்து விழுங்கிவிடும் போலிருந்தது.

அங்கு தங்கம்மாள், அழகம்மை இருவரும் இருந்தனர். சாரங்கனும் வந்திருந்தான்.

'என் கடிதம் கிடைத்திருக்கும் என்றே கருதுகிறேன்' என்ருன் சாரங்கன்.

'ஆமாம், பதில் வருவதற்குள் வந்துவிட்டீர்கள்!' என்றேன்.

'பதிலே, மரகதம் நேரிலே தெரிவித்துவிட்டாள்' என்ருன்.

'பதிலா—என்ன பதில்?' என்றேன்.

'அழகம்மைக்கு, நான் அண்ணன் என்று உறவு முறை கூறினுள்' என்ருன்.

'அந்த முறைதான், நான் கூற இருந்ததும்' என்றேன்.

'அழகம்மையின் மனக் கிளர்ச்சிக்கு பதில் மன வுறுதி ஏற்படும்படி, மரகதம்தான் செய்தாள்' என்ருன்.

இதற்கிடையில் தங்கம்மாள் பேசினுள்.

'மரகதம் தன்னை அடிக்கடி பட்டமரம் என்று கூறுவதுண்டு—ஆனுல் அவள் பட்டமரமல்ல, பண்பட்ட பகுத்தறிவு மரம்' என்ருள் தங்கம்மாள்.

'பண்பட்ட அம்மரம் தரும் அறிவுக் கனிகளை உண்டு மனந் தெளிந்துவிட்டீர்கள் என்றே எண்ணு கிறேன்' என்றேன்,

'ஆகா' என்ருள் அவள்.

'மரகதம் கூறுவதுபோல, நீங்களும், உங்களை கருகிய மலர் என்று கூறுவீர்களே! நீங்கள் கருகிய மலர் அல்ல — புரட்சி மலர் — அம்மலர்மணம், புதுமை யுணர்ச்சியைத்தான் வீசும்' என்றேன்.

இப்படிப் பேசிக் கொண்டிருக்கையில், மரகதமும், அழகம்மையும் குறுக்கிட்டார்கள்.

'பெண் குலத்தையே, ஆண் வர்க்கம், அலட்சியப் படுத்துவதை, ஒவ்வொரு பெண்ணும் எதிர்த்துப் போராட வேண்டும்—இல்லாவிட்டால், இந்த வர்க்கம் ஆணவப் பாதையில் இப்போது நடப்பதைவிட்டு விட்டு, ஓடவே ஆரம்பித்துவிடும்' என்ருர்கள்.

'போராடுவது என்ருல், அதில் போராடும் முறை யைப்பற்றி யோசிக்க வேண்டும்' என்ருள்.

'போராட்ட முறைகள் பல உண்டு' என்றேன்.

'அதில் வள்ளுவர் வகுத்த வழிதான் பெண்கள் வழி' என்ருள்.

'என்ன வழி?' என்றேன்.

'ஒருவருக்குத் தீங்கு செய்து விட்டவருக்குப் பதிலாக தீங்கு செய்வதைவிட, அவர் நாணிடும்படியாக நன்மையே செய்துவிட வேண்டும். அதுதான் பெண்களின் போராட்டமுறை' என்ருள்.

'பெண்களுக்கு பின் புத்தியென்பர் பித்தர் சிலர்-பெண்களுக்கு பெரும் புத்தி' என்றேன் நான்.

'பெரும் புத்தி என்பதோடு மட்டுமல்ல-விநோதமான புத்தியென்றும் கூறுங்கள்' என்ருள் அவள்.

'விநோதமல்ல-வியந்து பாராட்டி வழிபடவேண்டியது' என்றேன்.

'தங்களிடம் என் முடிவைக் கூருமல் வேறு யாரிடம் கூறுவது? பட்டமரம் துளிர்க்கிறதோ இல்லேயோ-அது வேறு காரியம்-ஆனல் வளர்ந்த மரத்தை பட்டமரமாக்கக் கூடாது. நான் பட்டு விட்டேன்-அதற்காக, அழகம்மையை பட்டுவிடச் செய்ய என் மனம் இடந்தரவில்லே. தங்கம்மாள் கருகினுள் என்பதற்காக, அழகம்மை கருகினல் சரியாகிவிட முடியுமா?' என்ருள்.

அவளின் அறிவுமிக்க உரையை கேட்க எனக்கு மிகவும் இனிமையாக இருந்தது.

தங்கம்மாள் கூறினுள்-அவள் உரையையும் எவரும் மறுத்துரைக்க முடியாது.

'பட்டமரம் பகுத்தறிவு பேசுவது, பட்டமரத்திற்குப் பெருமை-ஆனல், பட்டமரமாக்கிய துட்டமனங் கொண்டவருக்கு என்ன பாடம் கிடைக்கிறது-அதை யோசிக்க வேண்டாமா?' என்ருள்.

நான் பிறகு தெளிவு செய்தேன். அம்பலவாணரின் நிலைமையை அவர் கூறியதுபோலவே நீண்டநேரம் எடுத்து விளக்கினேன். முடிவாகச் சொன்னேன்.

'நான் ஆண் என்பதற்காக, அம்பலவாணருக்காகப் பரிந்து பேசுகிறேன் என்று கருத வேண்டாம். அம்பலவாணர் கூற்றுப்படி அவர் ஒரு பட்டமரம் அந்த மரத்தைத் துளிர்த்துச் செழிக்கவைக்க வேண்டியது அழகம்மையின் கடமை' என்றேன்.

'உண்மை' என்ருள் மரகதம்.

'அப்படியானுல், முதலில் அதைச் செய்வோம்' என்றேன் நான்.

பிறகு, நான் அழகம்மையை அழைத்துக் கொண்டு போய், அம்பலவாணர் இல்லத்தில் விட்டு வந்தேன். அவளும் எப்பொழுதும் போல, வீட்டிற்குப் போய் விட்டாள்.

* * *

தங்கம்மாள் மட்டும், எரியும் செந்தணலாக இருந்தாள்—மரகதத்தின் சமாதானம் அவளுக்கு திருப்தியைத் தரவில்லை. சாரங்கனும், அவளுக்கு நீதிகளை எடுத்துரைத்தான்.

என் கவனம் முழுவதும், இந்த சிக்கலைத் தீர்ப்பதிலேயே பதிந்திருந்தது. நான் திடமான முடிவிற்கு வந்தேன். தங்கம்மாவும், மரகதமும் வேறு எவரையோ மணந்து வாழ்ந்திடவேண்டும்!— இதுதான் என் முடிவு.

நான் பக்கத்து வீட்டிற்குச் சென்றேன்.

'மனித குலத்தில் பட்டமரம் இருக்க நியாயமில்லை. மர வகையில் பட்டுப்போனுல், பட்டது பட்டதே

தான். மனித குலத்தில், எந்தக் காலத்திலும் துளிர்த்துச் செழிக்க வழியிருக்கிறது. என்னைக்கேட்டால், மரகத மும் மணந்துகொள்ளலாம். தங்கம்மாளும் தாராளமாக திருமணம் செய்து கொள்ளலாம்.' என்றேன்.

மரகதம் வெறுப்போடு சிரித்தாள்--தங்கம்மாளோ, தன் முகத்திலேகூட அதுபற்றிய உணர்ச்சிகளைக் காட்டவில்லை.

இந்த நேரத்தில், வெளியில் கார்வரும் சப்தம் கேட் டது. நாங்கள் எதிர்பாராத நிலையில் அம்பலவாணரே வந்துவிட்டார்.

'மன்னிப்பு கேட்க வந்திருக்கிறேன்—மரகதம், மன் னிக்கவேண்டும்—தங்கம், என் குற்றத்தைத் தள்ளிவிட வேண்டும்—நான் வாழ்க்கையில் பட்டமரமாகத்தான் நிற்கிறேன்—நீங்கள் மன்னிக்காவிட்டால் வெகு சீக்கிரத் தில் மக்கி மண்ணோடு மண்ணாகிவிடுவேன்' என்றார்.

முதலில் இருவரும் பேசவில்லை. நான்தான் அவரை, அமரச்சொன்னேன்.

பிறகு மரகதம்தான் பேசினாள். அவள் குரல் கர கரத்தது ஆனால் பேச்சு தடுமாறவில்லை. தெளிவாக இருந்தது.

'தவறு உங்களிடம் மட்டுமல்ல – எங்களிடமும் இருக் கிறது. ஆகவே, ஒருவரையொருவர் குற்றஞ்சாட்டிக் கொள்வதைவிட, அந்தக் குற்றத்தைக் களைய முற்படு வோம் — ஆகவே, மன்னிப்புத் தேவையில்லை. நம் வாழ்க்கையிலிருந்து, மற்றவர்கள் நற்பாடம் பெறட்டும் என்றாள்.

'பாடம், முதலில், பாதை தவறியவருக்குக் கிடைக் கட்டும்' என்றாள் தங்கம்.

'பாடம், பல பயின்றுவிட்டேன், தங்கம் — இனி எனக்குப் புதிய பாடம் எதுவும் தேவையில்லை. நீங்கள் என்னை மன்னித்தீர்கள் என்பதற்கு அடையாளம்—நீங்கள் வேருெருவரை மணந்து வாழ்கிறீர்கள் என்ற செய்தியை எனக்களிப்பதுதான்' என்ருர் அவர்.

'அதையேதான் நானும் கூறினேன்' என்றேன்,

'வாழ்க்கை ஒரு தோட்டம்—அதில் விதையைத் தூவலாம், செடியை நடலாம்—கிளையை பதியம் போடலாம், கொடியை முளைக்கச்செய்யலாம். ஆனுல் மரத்தை நடுவது எப்படி?' என்ருள் மரகதம்.

'பெண் மரமல்ல—பூங்கொடி' என்றேன் நான்.

'எழுதமட்டுமே, அந்த ஒப்புவமை சரி—வாழ்க்கையில் அது விஞ்ஞன கற்பனை' என்ருள் தங்கம்.

'கொடியோ, மரமோ,—இந்தக் கொடியவன் சேர்க்கையால், இழுக்கு நேர்ந்துவிட்டது. அது துடைக்கப்பட்டது என்ற செய்தியை எனக்களியுங்கள்' என்ருர் அவர்.

இந்த நேரத்தில் வெளியிலிருந்து சாரங்கன், மனோகரன், தாரா மூவரும் உள்ளே வந்தனர்.

'நான் எதிர்பார்த்தது நடந்துவிட்டது, அம்பலவாணரே வந்துவிட்டார். இனி ஆறுதல் பெறுவர்' என்ருன் சாரங்கன்.

'ஆறுதல் பெற்ருல் மட்டும் போதாது—ஆருத புண் மாறிடவேண்டுமே!' என்ருன் மனோகரன்.

'நாம், பட்டமரத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிருேமே, படரும் கொடியை மறந்து விட்டோமே!' என்றேன் நான்.

அங்கிருந்தோர் அனைவரும் விழித்தனர். நான் மேலும் விளக்கினேன்.

'படரும் கொடி தாரா—அவள் படர, கொம்பாக, மனோகரனை தேர்ந்தெடுத்து விட்டாள். அவர்கள் இருவரும், தங்கம், மரகதம் பிரச்சினை முடிந்தாலே, தங்கள் திருமணம் என்று உறுதி யெடுத்திருக்கிறார்கள்' என்றேன்.

'ஆமாம், முதலில் அந்தக் கொடி படரும் விழா நடைபெறட்டும்-மற்றவற்றைப் பிறகு பேசுவோம்' என்றாள் மரகதம்.

'அதுதான் சரியான முடிவு' என்றாள் தங்கம்மாள்.

* * *

நான் என் வீட்டில் அவர்கள் அனைவருக்கும் விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தேன்.

நிலா, விருந்தை மிகப்பிரமாதமாகச் செய்திருந்தாள்.

எல்லோரும் விருந்தருந்திக் கொண்டிருந்தோம். அப்போது நான் கூறினேன்:

'பட்டமரம், வாழ்க்கைத் தோட்டத்தில் ஏற்படுவதற்கேற்ற காரணம், எதையெதையோ காரணமாகக் கூறுகிறார்கள். வாய்க்காலில் வந்த நீர் என்கிறார்கள்—கிளையை வெட்டினதுதான் என்கிறார்கள்—வேரைக் கெல்லியதுதான் என்கிறார்கள்-இவைகளும் காரணமாக இருக்கலாம். ஆனால் வாழ்க்கைத் தோட்டத்து மண்ணே, இன்று மரங்களைப் பட்டுப் போகச் செய்யும் நிலையிலுள்ளது. அதில், சாதி, மத, பேதமெனும் விஷப் பூச்சிகளும், மூடப் பழக்கம் மௌடீகக் கட்டுப்பாடு போன்ற

விஷ சத்துகளும் மண்ணோடு மண்ணாய் கலந்திருக்கின்றன. அந்த மண்ணைத் தோண்டி, அந்த விஷங்களை வெளியேற்றி, பகுத்தறிவு, பரந்த நோக்கம் போன்ற எருக்களையிட வேண்டும்—அப்போதுதான் மரம், பட்டுப் போகாது—இதனை நாம் புரிந்துகொள்ள வேண்டும்' என்றேன்.

'செவிக்குணவில்லாதபோது, சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும் என்றார் வள்ளுவர். ஆனால் இன்று செவிக்கு, வயிற்றுக்கு இரண்டிற்கும் சேர்த்தே உணவு தந்து விட்டார் புத்தர்' என்றார் அம்பலவாணர்.

உணவு முடிந்து எல்லோரும் வாசலில் அமர்ந்தோம்.

அப்போது உள்ளே தாம்பூலத்தட்டை எடுத்துவரச் சென்றேன். என் மேசையின் மீது, எனது புதிய நாவலின் கையெழுத்துப்பிரதி கிடந்தது பட்டமரம் சொல்லிவிட்டுப்போன கதையின் முடிவு இன்னமும் எழுதப்படாமலே இருந்தது. அதுவும், செழித்து வளர்ந்து, இடையிலேயே பட்டுப்போன பட்டமரமாக எனக்குப் பட்டது!

# எமது அடுத்த வெளியீடு

## கடிகாரம்



இராம. அரங்கண்ணல்

எழுதிய சுவைமிக்க நாவல்

கால வேகத்தைக் காட்டும் கடிகாரமல்ல இது-இச்சமூக வாழ்க்கை வேகத்தைக் காட்டும் கடிகாரம். இதில் முள்ளாக இருப்பவை இரும்பினாலானவையல்ல — மனித உருவங்களாலானவை. இந்தக் கடிகாரம் ஒவ்வொருவர் கரத்தில் கட்டவேண்டியதில்லை. இதயத்தில் கட்டவேண்டியதாகும்.

விலை ரூபாய் 1—8—0